# சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள்

மாயூரம் முன்சீப்

ச. வேதநாயகம் பிள்ளை

அவர்களால் இயற்றியது.

---

B. இரத்தின நாயகர் அண்டு சன்ஸ்,
பதிப்பாளர் :: சென்னை-1.

# சர்வசமய சமரசக் கீர்த்தனைகள்

மாயூரம் முன்சீப்

ச. வேதநாயகம் பிள்ளையவர்கள்

இயற்றியது



ப. குப்புசாமி முதலியார் அவர்களால்

பதிப்பித்த பிரதிக்கிணங்க

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

திருமகள் விலாச அச்சு நிலையம்,

சென்னை.

விலை ரூபா 1—8—0

## சர்வ சமய சமரசக் கீர்த்தனைகளின்

# அகராதி

| கீர்த்தனைகளின் ஆதி | பாட்டு இலக்கம் | பக்கம் | கீர்த்தனைகளின் ஆதி | பாட்டு இலக்கம் | பக்கம் |
|---|---|---|---|---|---|
| ...த்தனிபோல் | 182 | 174 | மாதரைநினையாதே | 153 | 133 |
| ...ரப்பிரம்மமே | 109 | 92 | பரதேவன்வார்த்தை | 190 | 186 |
| ...ரனே அடியார் | 29 | 28 | மார்க்கம் அல்லடி | 187 | 180 |
| ...மனே பக்தர் | 60 | 53 | மார்க்கம்இதுமகனே | 177 | 163 |
| ...ரசத்தால் | 52 | 47 | மெய்ஞ்ஞானம் | 91 | 77 |
| ...ரதம்கப்பினேன் | 110 | 93 | மெய்யிது மெய்யிது | 108 | 92 |
| ...லைடி அருளாயோ | 134 | 110 | மைத்துனரோடாளும் | 192 | 189 |
| ...ண்ணையம்போல் | 147 | 124 | மைத்துனரே | 191 | 187 |
| ...த்தி இதுமகனே | 178 | 165 | வாவாஜெகநாதா | 72 | 63 |
| ...ரட்டெல்லாம் | 159 | 140 | வாவா வாவா | 118 | 99 |
| ...பண்ணுசையே | 155 | 135 | வாவா தேவே | 96 | 81 |
| ...பொருளை விரும்ப | 148 | 125 | வாழ்வை நம்பாதே | 150 | 128 |
| ...பாதத்தாளன்னை | 115 | 96 | வித்தையை படிப்பி | 188 | 181 |
| ...பாதும்போதும் | 165 | 146 | வினையேவினையே | 7 | 7 |
| ...பானதுபோகட்டும் | 145 | 122 | வீண்கர்வம்என் | 149 | 127 |
| ...யக்கிருய்மனமே | 160 | 141 | வேதநாயகனே எவ்வி | 41 | 37 |
| ...னயேடனக்கு | 154 | 134 | வேதநாயகனே மெய் | 113 | 95 |
| ...னமேநீசனுமத்தை | 140 | 117 | வேதநாயகா நம்பி | | |
| ...னமேமறவாதே | 141 | 117 | னேன் உனை | 62 | 55 |

## கீர்த்தனைகளில் வரும் இராகங்களின் அகராதி

| இராகம் | கீர்த்தனைகளின் இலக்கம் | இராகம் | கீர்த்தனைகளின் இலக்கம் |
|---|---|---|---|
| ...சாவேரி | 5-52-157-167-185 | கண்டா | 96 |
| ...டாணு | 26-69-141 | கமாஸ் | 40-55-77-153 |
| ...பூர்வம் [ணி | 130 | கரகரப்பிரிய | 54 |
| ...மிர்தகல்யா | 129 | கல்யாணி | 13-19-84-142-186 |
| ...ம்சத்தொனி | 132 | கற்கடா | 22 |
| ...ஹிரி | 31-63 | கனக வசந்தம் | 111-148 |
| ...னந்தபைரவி | 36-87 | கன்னட கௌள | 53 |
| ...ரபி | 25 | | |
| ...ந்துஸ்தான் காப்பி | 102-118-146-147-150-151 192 | காப்பி | 104 |
| | | காம்போதி | 4-29-38-42-57-187 |
| ...மகோரி | 74-108 | குந்தளவராளி | 100-140 |
| ...சேனி | 23-97 124-139-180 | கெங்காதரணி | 80 |
| ...குலகாம்போதி | 56-61-143-144 | கோதாரகௌளம் | 3-20-35 |

| இராகம் | கீர்த்தனைகளின் இலக்கம் | இராகம் | கீர்த்தனைகளின் இலக்கம் |
|---|---|---|---|
| கேதாரம் | 28-32 | நாதநாமக்கிரியை | 10-15-50-113-1 164-168-188 |
| கௌளிபந்து | 114-116-154 | நீலாம்புரி | 67 |
| சங்கராபரணம் | 60-152-156-173 | பங்காளா | 85 |
| சஹானா | 73-83-90-94-178 | பந்து | 106 |
| சரசாங்கி | 131 | பந்துவராளி | 51-159 |
| சாமந்தா | 91 | பரசு | 8-58-65-82-92-1 |
| சாயா | 41-88-101-109 | பலஹம்சா | 93 |
| சாரங்கா | 49-179 | பியாகடை | 30-75-174 |
| சாவேரி | 105-162-184 | பியாக் | 18-64-103-110- 134-176 |
| சாளங்க பைரவி | 95 | பிலஹரி | 128-183 |
| சுத்தசாவேரி | 86-89 | புன்னாகவராளி | 34-125-165-190 |
| சுப்பிரதீபம் | 7 | பூபாளம் | 66 |
| சுருட்டி | 17-120-45 | பூரணகௌளை | 6 |
| செஞ்சுருட்டி | 39-13 | பூரணச்சந்திரிகை | 127 |
| சைந்தவி | 45 | பூரிகல்யாணி | 81-98 |
| சௌராஷ்டிரம் | 135-155-163-166 172-181-182 | பைரவி | 16-112-122-171 |
| ஜங்கலா | 126 | மத்தியமாவதி | 48-59 |
| ஜயந்தஸ்ரீ | 33 | மணிரங்கு | 11 |
| ஸ்ரீராகம் | 62 | மனோகரம் | 136 |
| தர்பார் | 12-161 | மாஞ்சி | 44 |
| தன்னியாசி | 46-68-158-175 | முகாரி | 24-71-170 |
| தீரசங்கராபரணம் | 133 | மோகனம் | 9-47-121-123-1 177-189 |
| துசாவந்தி | 2-27 | யமுனாகல்யாணி | 21 |
| தேசமுகாரி | 115 | ரீதிகௌளை | 78 |
| தேசிகதோடி | 14-137 | லலிதா | 79 |
| தேவகாந்தாரி | 1 | வசந்தா | 160 |
| தேவமனோகரி | 87-149 | | |
| தோடி | 70-72-76-107-188 | | |
| நாகத்தொனி | 99 | | |

சர்வசமய சமரசக் கீர்த்தனைகளின்

# பிரிவுகள்



## ஹிதோபதேசக் கீர்த்தனைகளின் விவரம்

குடும்ப சம்பந்தக் கீர்த்தனைகளின் விவரம்

உ

கடவுள் துணை

# சர்வ சமய சமரசக் கீர்த்தனைகள்

---

## 1. இராகம்-தேவகாந்தாரி, ஆதி தாளம்.

### பல்லவி

எக்காலமும் உந்தன் பொற்கால் பணிந்துகொண்
டிருக்கநீ வரம் அருள்வாய் — எக்கா

### அநுபல்லவி

தக்கோர் அபிமான ஞான சீலா
சகல புவன ரக்ஷ காநு கூலா — எக்கா

### சரணங்கள்

1. சந்த மேவுபிர பந்தமாலைபாடி
கந்தமார் உன் அர விந்தபாதம்சூடி
வந் தனுதிகள் அநந்தமே சொலி
விழுந்து பூமியில் எழுந்து நைந்துருகி — எக்கா

2. துங்க சாதுஜன சங்கமோடு கூடி
பொங்கும் ஞான அக ளங்கவாரி ஆடி
அங்கமே பாவ சங்கொளப்பலப
தங்களோடு சுப மங்களங்கள் சொலி — எக்கா

3. பழுதிலாது தினம் முழுதும் உன்னைநாடி
தொழுது நேசமுடன் அழுதுபாடி ஆடி
ஒழுகு செந்தழலின் மெழுகுபோல மனம்
இளகியே அதிக புளகிலாங்க முடன் — எக்கா

4. பூதலம் பரவு பாதவேத நாதா
சாதகம் செய்யும் அபேதநீத தாதா
போத நாயகனே பூத நாயகனே
கீத நாயகனே வேத நாயகனே — எக்கா

---

## 2. இராகம் - துசாவந்தி, ஆதி தாளம்.

### பல்லவி

ஓடி நான் உனைத் தேடி வந்தேன்—எனக்
குதவி செய்தருள் ஐயனே

### அநுபல்லவி

நாடி உன்பதம் தொட்டேன்
கோடி தரம் கும்பிட்டேன்
நாத விநோத பிரசாத பிரபோத
அபேத அதீத நிர்வாத நியாதனே

### சரணங்கள்

1. அற்பமான பதார்த்தம்—சற்றும் விரும்பேன்
ஐயா யிது யதார்த்தம்
அற்புத பரமார்த்தம்—கொடுத்தருளில்
அதுவே உபயோகார்த்தம்
பற்பல விசித்திரனே
கற்பனை சமுத்திரனே
பாச விநாச சுரேச நரேச
பிரகாச விகாச உலாச விலாசனே

2. வந்துனையே அடுத்தேன்—கீர்த்தனமாலை
வகை வகை நான் தொடுத்தேன்
வந்தனம் கைகொடுத்தேன்—நீ வசிக்க என்
மனக் கோயிலுங் கொடுத்தேன்
அந்தமனை உனக்கே
உந்தன்மனை எனக்கே
ஆய விதேயர்கள் நேயசகாய
அகாய உபாய நியாய விதாயனே

3. அன்பர் உபாசனனே—பூதலந்தன்னில்
அதர்ம விமோசனனே
இன்ப நிவேசனனே—வேதநாயகன்
இதய சிம்மாசனனே
என் பாவங்களைத் தீர்ப்பாய்
உன் பதந் தன்னிற் சேர்ப்பாய்
ஏக அனேக திரிலோக நிர்வாக
தெய்வீக விவேக அமோக தியாகனே.

## 3. இராகம் - கேதாரகௌளம், ஆதி தாளம்.

பல்லவி

எனை ஆதரிப்பாயே—என்மன இருள்
தனையே பிரிப்பாயே — எனை

அநுபல்லவி

வினையே அரிக்கும் செல்லா
வீணனுன் ஒரு புல்லா
நினையா என் மனம் கல்லா
நிதம் அதனுடன் மல்லா

நிச்சயப் பிரபோதனே
அக்ஷயப் பிராக்கியாதனே
சர்ஜனப் பிரதாபனே
துர்ஜனப் பிரமாதனே — எனை

சரணங்கள்

1. துக்கப் பிரபஞ்சத்தொல்லை
சொல்வதற் குண்டோ எல்லை
திக்குவே றெனக்கில்லை
தெய்வமே கேள் என் சொல்லை

சிஷ்டர் சமுதாயனே
துஷ்டர்கள் அபாயனே
இஷ்டர்கள் சகாயனே
அஷ்டகுண நேயனே — எனை

2. அடியனுன் வினைவசம்
ஆயினேன் இது நிசம்
படியிற் கருணாரசம்
பாலித் தருள் கவசம்

பக்தஜன நேசனே
சுத்தமன வாசனே
சித்தமல நாசனே
வித்தக விலாசனே — எனை

3. மருவிய பாசவலை
மாட்டி உற்றேன் கவலை
தரும சைதன்னிய நிலை
தந்தென் மயக்கந் தொலை

சங்கட நிவாரகா
எங்கள் குல தாரகா
பொங்கு சுக தாயகா
துங்கவேத நாயகா — என்னை

---

4. இராகம் - காம்போதி, ஆதி தாளம்.

பல்லவி

சித்தம் உவந்தருள் செய்ய—இத்தனை தாமதமேது
சீலனே புவனபரி—பாலனே மூலனே நீயுன் — சித்தம்

அநுபல்லவி

நித்தனே புவியெங்கும்பிர—சித்தனே நிகல லோக
கத்தனே ஜீவகோடிகட்—கத்தனே சுத்தனே நீயுன் — சித்தம்

சரணங்கள்

1. அசடனுனென்ப தென்ன ரகசியமா—பெற்ற
அன்னையிடம் உண்மை சொல்லவே பயமா
வசஞ்செய்தருள்வதுனக்கோர் விஷயமா யாவும்
வல்ல உனக்கிதென்ன அதிசயமா

வசன சாதுரியனே
மன்ன மாதுரியனே
சுஜனர்கள் பிரியனே
சுரர்தொழும் பெரியனே — சித்தம்

2. நிதமும் உனதுபத கைங்கரியமே—செய்ய
நீயருளெனக்குச் சுதந்திரியமே
அதுவே யெனக்குப் பெரும் சௌகரியமே—இனி
ஐயனே வேண்டேன் வேறு ஐசுவரியமே

அதிசய அப்பிரமேயா
அகணித சுப்பிரகாயா
விதிநெறி செப்பும் வாயா
விநய சங்கற்ப தூயா — சித்தம்

3. பூதபௌதிக மெல்லாம் நிறைவோனே—நல்ல
புண்ணியத் திருமறையை அறைவோனே
வேதநாயகன் மனம் உறைவோனே— ஞான
விழியில்லாதவருக்கு மறைவோனே

போதப் பிரகாசனே
புண்ணியப் பிரதேசனே
சாதகக் கிருபேசனே
தாசருட் பிரவேசனே சித்தம்

---

5. இராகம் - அசாவேரி, ஆதி தாளம்

பல்லவி

உன்னிடத்திற்சொல்லாமல் யாரிடத்திற்சொல்லுவேன்
ஓ ஓ ஜகதீசா உன்னி

அநுபல்லவி

பொன்னிடத்தாசையது புனிதர்கள் தமக்கின்பம்
பொழிதருவே இந்தப் புவியில்நான்படுந்துன்பம் உன்னி

சரணங்கள்

1. வயிறுபசிக்கும்பிள்ளை மாதாயிடம்போமன்றி
மற்றவரிடத்திற் சேருமோ—நாளும்
அயர்வுறும்பெரும்பிணி அருமருந்தாலன்றி
அயலொன்றினாலே அதுதீருமோ—கண

வெயிலால் வருந்துவோரே
வேண்டுவர் நிழல்தீரே
உயிர்ப்பயி ரோம்புங்காரே
உனையன்றிக் கதியாரே

உலைவுறுசல்லடை போற்பலஓட்டை
உளதாகியவெறும் புழுமலக்கூட்டை
நிலையெனமனக்கவி செயும்பலசேட்டை
நித்தியம் நான்அத னாற்படும்பாட்டை உன்னி

2. நாதனேநான்பிழை யாதுசெய்யினும் நின்னை
நம்பினேன் என்மேலின்னம் க்ஷாத்ரமா—பாரில்
ஓதரும்புலச்சத்து ராதியர்க் கையிலென்னை
ஒப்புவிக்குதல்தர்ம சாஸ்திரமா—மறு

மாதர்மேற் செல்லும்நேத்திரம்
வாயேஅபத்தபாத்திரம்
தீதுரைகொள்ளுஞ் சுரோத்திரம்
சிற்றின்பம்வேண்டுங் காத்திரம்

தீயஅவயங்கள் செயுந்தினமோசம்
சிந்தையிற்குடிகொண்ட தாசாபாசம்
நாயேன்செய் கைகளே ஆபாசம்
நாற்பக்கத்திலும் நான்படுங்கிலேசம் — உன்னி

5. எத்தனைசுமைபாவம் வேண்டுமானாலும் முக்தி
எனக்குக்கொடுக்கலாம் அச்சாரமே—எந்தன்
அத்தனேநானுன்சேயென் றறிந்தும்கோய்செயுமாயைக்
கார்தந்தார் இந்த அதிகாரமே—சர்வ

உத்தமஞ்சேர் நிர்தோஷ
உன்னதமா விசேஷ
பத்தர்நித்திய சந்தோஷ
பரசமயத் அவேஷ

பாக்கியமலர்ந்தருள் பழுக்கும்உத்தியான
பலபுவநாத்மகோ டிகள்அபிமான
ஆக்கியவேத நாயகன்ஸ்வாதீன
அன்னைதந்தைகுரு தெய்வஞ் சகலமுமான — உன்னி

---

6. இராகம் - பூரணகௌளை, ஏக தாளம்.

பல்லவி

என்பிழைகள் பொறுத்தாள்வாய் எனை—அலைக்கும்
துன்பவினை அறுத்தாள்வாய்

அநுபல்லவி

முன்பரனியே ஜெபிக்கும்
அன்பர்கள் அனுபவிக்கும்
இன்பமே அவர்விரும்பும்
நின்பத கமலம் நம்பும் — என்

சரணங்கள்

1. நேயனைப்போல் விவகரிப்பேன்—துதிகவிகள்
ஆயிரம் உண்டாக்கி விரிப்பேன்—என்செய்கை யெல்லாம்
வாயின் அன்பாலாதமனந் தோயும் அன்புளதோஇது
நாயின் அன்புமேயில்லாமல் தீயவம்பனாய்த் திரியும் — என்

2. எண்ணவொண்ணுமோ என் பவமே—ஐயனே இந்த
மண்ணினில் என்ஜன்மம் அவமே—தினந்தினமும்
உண்ணலும் நித்திரைதனை—நண்ணலும் பெரும்பாவங்கள்
பண்ணலும் அல்லாதுன்பதம்—என்னல் செய்தறியேன்
[ஸ்வாமி என்

3. போதகம் என்னிடம் லயமே என்மனம்பஞ்ச
பாதகங்கட் காலயமே—புவனமிசை
மாதவம் புரிபவர்க்குக்—கோதகலும் இகபர
சாதகங் கொடுத்தருளும்—வேதநாயகா இரங்கி என்

---

## 7. இராகம் - சுப்பிரதீபம், திரிபுடை தாளம்.

பல்லவி

வினையே எனையே மேவா தருளே வினை

அநுபல்லவி

நினையேநம்பினேனின்மலப்பொருளே வினை

சரணங்கள்

1. கனவிலுந் தருமத்தைக் கண்டறியேனே
அனவரதமும் உனதருள் குறியேனே வினை

2. பாவமென் பதற்கொரு பதியானேனே
ஜீவனுய்வழி தெரியாமற் போனேனே வினை

3. உதரபோஷணை யன்றி உனைநினையேனே
இதயந்தனில் உன்னடி இணைபுனையேனே வினை

4. பூதலந் தொழும்அதி புண்ணியர் மித்திரனே
வேதநாயகன்தொழும் விமலபத்திரனே வினை

---

## 8. இராகம் - பரசு, ரூபக தாளம்.

பல்லவி

ஆண்டருளே கருணை பூண்டருளே ஆண்ட

அநுபல்லவி

தூண்டருஞ் சுடராக விளங்கும்
சோதியே உயர் நீதியே எனை ஆண்ட

சரணங்கள்

1. என்னை ஆள்வது பாரமா—என
திடம்வா வெகுதூரமா
அன்னைக்கும் உபசாரமா—எனக்
கருள்புரிய இன்னேரமா—கன

ஆயனே மெய்ஞ்ஞான
சூரியனே சர்வலோக
காரியனே மிகுந்தவுள
தாரியனே ஜகந்தனில்

உன்னையல்லாது பின்னையார் துணை
யோகனே சுக போகனே—என்னை ஆண்ட

2. எனதுடலெனும் புல்லையே—காக்க
எவர்க்குங் காட்டுவன் பல்லையே
தினமும் ஆயிரந் தொல்லையே—இதில்
சிறிதுமே சுகம் இல்லையே—கன

சேதனனே பெரியபு
ராதனனே பரமவி
கேதனனே மெய்ஞ்ஞான
சாதனனே அனுதினம்

நினது பாதம் நம்பினேன் அதி
நேசனே பிரகாசனே என்னை ஆண்ட

3. பொறுமை உனக்குச் சொந்தமே—நான்
புரியும் பிழை அநந்தமே
மறுமையுறு நிர்ப்பந்தமே—கெட
மலர்பா தாரவிந்தமே—கன

மாக்ஷியனே அடியர்கண்
காக்ஷியனே சர்வாண்ட
சாக்ஷியனே தனி அர
சாக்ஷியனே தினந்தினம்

சிறுவன் வேதநாயகன் பணி
சீர்த்தியே அற மூர்த்தியே என்னை ஆண்ட

## 9. இராகம் - மோகனம், திரிபுடை தாளம்.

### பல்லவி

காக்ஷி எனக்குக் கொடாமலிருக்கிற
காரணம் ஏதையா — காக்ஷி

### அநுபல்லவி

சாக்ஷியாய் நிற்கும் சருவாதிகாரனே
மாக்ஷியுடையோர் மகிழ்நிர்விகாரனே — காக்ஷி

### சரணங்கள்

1. அந்தரங்கபத்தி அற்றவனன்றோ
அக்கிரமத்தில்பெயர் பெற்றவனன்றோ
பந்தப்பேய்க்குள்ளத்தை விற்றவனென்றோ
பாதகங்களெல்லாங் கற்றவனென்றோ — காக்ஷி

2. மறந்தும் ஒருமெய்சொல் லாதவனென்றோ
மருந்துக்கும நன்மையில் லாதவனென்றோ
சிறந்தமெய்ஞ் ஞானங்கல் லாதவனென்றோ
தேசத்தார்களெல்லாம்பொல் லாதவனென்றோ — காக்ஷி

3. ஏசிமறையை இகழ்ந்தவனென்றோ
ஈனமதத்தைப் புகழ்ந்தவனென்றோ
நீசெய்தநன்றி மறந்தவனென்றோ
நீசர்க்குள்மெத்தச் சிறந்தவனென்றோ — காக்ஷி

4. ஆதிமத்தியாந்த ரஹிதமகேசா
அற்புதசின்மயா னந்தவிலாசா
வேதவேதாந்த விதியுபதேசா
வேதநாயகன் இதயப்பிரகாசா — காக்ஷி

---

## 10. இராகம் - நாதநாமக்கிரியை, ரூபக தாளம்.

### பல்லவி

அருள்புரிவாயே—எனதுள
மருள்தெரிவாயே — அருள்

### அநுபல்லவி

இருளை நிகரும் சுருள் கொள் ஓதியர்
இலதம்பொருள் — உலகம்புரி — கலகம்படர் — விலகும்படி — அருள்

சரணங்கள்

1. நினைவெல்லாம் உன்நினைவுதாயென் நெஞ்சம் உண்ணுதோ பழி
புனையும்வாய்வெறும் பேச்சைவிட்டுப் புகழ்ந்து பண்ணுதோ—
தினையளவு மெய்தனைவிடாது [சிறு
சிந்தித்துனை—வந்தித்திடு—புந்தித்திடம் — வந்துற்றிட அருள்

2. எத்திசையும் உன்னுருவமாகவே இலகக்காணேனோ சொந்த
அத்தம்யாவும் நீயென்றேமிக ஆசைபூணேனோ—கன
பத்தியாயுனை நித்தம்போற்றிப்
பாடித்தினம்—நாடித்தவம்—நீடிக்கதி—கூடிக்கொள்ள அருள்

3. நீதமாயவரும் போதமாயெங்கும் நிறையுங்கர்த்தாவே—நாளும்
வேதநாயகன் காதல்மணம்பெண் மேவும்பர்த்தாவே—கொண்ட
ஏதமறப்பிர சாதம்உதவி
இழிவண்டிய—பழிவிண்டுநல்—வழிகொண்டுனை—விழிகண்டிட
[அருள்

---

## 11. இராகம் - மணிரங்கு, திரிபுடை தாளம்.

பல்லவி

சித்தம்இரங்கிநல் முத்தர்தங்கோஷ்டியிற்
சேர்த்தெனைக் காத்தருளே சித்த

அநுபல்லவி

உத்தமசீலர்தஞ் சித்தமலர்உறை
வேனே—கோனே—வானே—தேனே சித்த

சரணங்கள்

1. நின்னடித்தொண்டனு னென்ன அறியவும்
நிதம் உலகந்தானே
என்னஉன்தொண்டின் பலனென்றனைப்புவி
ஏசில்என் சொல்வேனே
பன்னரும் உன்னருள் என்னருகாகிடப்
பண்ணே—கண்ணே—எண்ணே—விண்ணே சித்த

2. பொய்த்தெய்வங்களைப் போற்றிப்பெரும்பழி
பூண்டவர்தம் முனமே
மெய்த்தெய்வம் உன்னைத் தொழும் எனக்கென்ன
விசேஷப் பிரயோஜனமே
கைத்தொழில் உண்டம் அனைத்தையுந் தாங்கிடு
ஐயா—துய்யா—மெய்யா—ஐயா சித்த

3. கழுவக்கழுவ அழுக்குடல்மீது
கலந்திடருந் தன்மையே
தழுவி என்னெஞ்சுறு மாசுகள் நீங்கிடத்
தந்தருள்வாய் நன்மையே
எழுமண்பொருடுவேத நாயகன் போற்றிடும்
ஏகா—யோகா—வாகா—தியாகா சித்த

---

## 12. இராகம் - தர்பார், திரிபுடை தாளம்.

பல்லவி

என்னை ஆளையா—என் விண்ணப்பம்
தன்னைக் கேளையா என்னை

அநுபல்லவி

மின்னை நிகரும்வாழ்வை வெறுப்பவர்க்குரியோனே
அன்னைபிதாசற்குரு வாகியபெரியோனே என்னை

சரணங்கள்

1. அடியன்மேற்சினமா—என்குறை நீக்கி
ஆள்வது கனமா
கடினம் நின் மனமா—எனது நெஞ்சங்
கவலைக்காசனமா
படியில் என்னகத்துறு பாவ இருளைமாற்றித்
திடமுறவே மெய்ஞ்ஞானத் தீபந்தனையேற்றி என்னை

2. என்றுஞ் சஞ்சலமா—ஐயனே மாயைக்
கிவ்வளவு பலமா
வென்றுகொள்புலமா—அதனால் ஏழை
மெலிவது நலமா
நன்றுருவாகிய நாதா என்முகம் நோக்கிக்
குன்றென நான்செயுங் கொடுவினைகளைப் போக்கி என்னை

3. கைவிடலாமா—என்னிடம்வாக்
கால்மலர் நோமா
நைவினை போமா—இனிமைதங்கும்
நன்னய நாமா
தெய்வநாயகனுகித் திகழுறும் அகளங்கா
கைவல்லிய ஞானநெறி கமழ்மதுரப்பிரசங்கா என்னை

4 தித்திக்குந்தேனே—அமுதேகன
தேவர்கள் கோனே
எத்திக்குந்தானே—எள்ளுளெண்ணெய்போல்
இருக்குங்கோமானே
புத்தியுடையோர்சூட்டும் புகழ்மாலை அணிதேவனே
பத்தியுடனே வேதநாயகன் பணிவோனே என்னை

---

13. இராகம் - கல்யாணி, ரூபக தாளம்.

பல்லவி

தருணங்கருணைபுரிவாய்—ஐயா—உனக்கனந்தங்கோடி
சரணஞ்சரணந் தெரிகுவாய்—மெய்யா தருணங்

அநுபல்லவி

அருணகோடி தேஜோமயனே—பொன்
திரணமென் றுன்னுவோர்பயனே—இத் தருணங்

சரணங்கள்

1. இந்திரியச் சத்துருக்கள் செய்—மோசம்
என்னசெய்வே னிர்வகித்தல்பிர—யாசம்
நிந்தனையான அநுபந்த—பாசம்
நீங்கச் செய்வாய் புண்ணியஉப—தேசம்

நீயேகதியன்றோ—ஒரு
தாயேதுயர்ஒன்றோ—சிறு
நாயேன்கெடநன்றோ—கன
தீயேன்உடல்குன்றோ—இது தருணங்

2. கோரமாய்த் தன்பிள்ளைசெய்யினுந்—தீது
கோபித்துநீக்கிடுந் தாயுண்டோ—ஓது
காரமா நான்செய்யும் பாவம்—பெறாது
காத்தென்னை ரட்சிப்பா யுலகத்தின்—மீது

காயத்தை எடுத்தேன்—அருள்
மாயத்தை அடுத்தேன்—அநி
யாயத்தை உடுத்தேன்—இனி
நேயத்தை விடுத்தேன்—இது தருணங்

3. நச்சுமரத்தையும் வைத்தவன்—தானே
நாள்தோறுங்காவல் செய்யாமல்—இரானே
இச்சகமீதில் எனை அமைத்—தோனே
என்னை நீ ஆளாவிடிற்பிழை—யேனே

ஏகந் தழையுருவே—சுக
போகந் தழைதருவே—கன
யோகந் தழைதிருவே—முகிர்
பாகந் தழைகுருவே—இது தருணங்

4. நிதமும் நானுறும் பாதகச்—சேறு
நீக்கிடப் போதுமோ நின்னருள்—ஆறு
விதியும் கதியும் இல்லையே—வேறு
வேதநா யகனே அருள்—பேறு

வேதத் துருவோனே—பல
பூதப்பெரு மானே—கன
போதத் தமர்கோனே—உன்
பாதத்தைவி டேனே—இது தருணங்

---

## 14. இராகம் - தேசிகதோடி, ஆதி தாளம்.

பல்லவி

ஐயா வென்னை ஆண்டருளே—உனை
அண்டினனே மனம்—வேண்டினனே ஐயா

அநுபல்லவி

பொய்யாம் வாழ்வினில் நான் குழையாமல்
போகாதிகளில் என்மனம் நுழையாமல் ஐயா

சரணங்கள்

1. ஒருநிமிஷமு முனதடி மறவாமல்
உலகழியினு முனதருள் துறவாமல்
இருதய மதனிலோ ரிடம்பிற வாமல்
இழிவுறு பழியொடு நாணிற வாமல் ஐயா

2. உன்னையலா தொரு வரையும் தொழாமல்
உதர நிமித்தம் எங்கும் ஓடியழாமல்
இங்கில மீது துராசை எழாமல்
இறந்தபின் னெரி நரகில் விழாமல் ஐயா

3. நல்ல வழிதனை எந்தநாளும் விடாமல்
நாட்டில் அசடனென நான் பேரெடாமல்
பலவகை யாகிய பழிகள் தொடாமல்
பாவையர் மோகத்திற் படிந்து கெடாமல் ஐயா

4. என்னுயிர் போல எவ்வுயிரையும் பேண
இகசுக போகத்தை என்றுமே நாண
மின்னுங் குணபூ ணந்தனைப் பூண
வேதகா யகனே நானுனைக் காண — ஐயா

---

15. இராகம் - நாதநாமக்கிரியை, ஆதி தாளம்.

பல்லவி

இந்த வரந்தருவாய்—ஸ்வாமி — இந்த

அநுபல்லவி

பந்த வினையெலாம் அறவேண்டும்—உன்
பாத தரிசனம் பெறவேண்டும் — இந்த

சரணங்கள்

1. தினமும் உன்பதமலர் தொழவேண்டும்—நான்
தேக பரவசமா யெழவேண்டும்
அனல் மெழுகாயுருகி யழவேண்டும்—இனி
ஆனந்தக் கடலில் நான் விழவேண்டும் — இந்த

2. தேகவிஷாதிகள் கெடவேண்டும்—ஞான
தீபத்தை யென்னுளத்தில் இடவேண்டும்
பாக அறப்பயிரை நடவேண்டும்—அந்தப்
பயிர்க்குள் அருட் புனலை விடவேண்டும் — இந்த

3. மோகப் பசாசுதனை வெலவேண்டும்—நல்ல
முத்தி நெறியிலே செலவேண்டும்
காகமெனும் புலனைக் கொலவேண்டும்—வேத
நாயகனே நின்னுமஞ் சொலவேண்டும் — இந்த

---

16. இராகம் - பைரவி, ஆதி தாளம்.

பல்லவி

இந்தப் பிழைகளெல்லாம் பொறுப்பாயே—பாச
பந்தக் களைகளை வேரறுப்பாயே — இந்த

அநுபல்லவி

சொந்தப் பிள்ளைகளான தூயவர்க்குப் பிதாவே
அந்தப் பரமசுகம் அளிக்குங் கனதாதாவே — இந்த

1\. ஆதியான பரஞ்சோதி உன்னை நான் வெறுத்தேன்
என்மனத்தை
ஆகமாதிகள் சொல் யோக சாதனையில் நிறுத்தேன்
அநுதினமும்
வேத வேதியர்கள் ஓது நீதியையு மறுத்தேன்
சமர்த்தன்போலே
வீம்புபேசிப் பெரும் பாம்புபோல விடம் பொறுத்தேன்
சதாகாலமும்

பூதல வாழ்தனை நாடினேன்—மறு
மாதர்கள் சுகந்தனைத் தேடினேன்—பஞ்ச
பாதகரோடும் உறவாடினேன்—கன
காதகனென்று பெயர் சூடினேன்
ஆதுலர்க்கமு தீயாமலே தடுத்தேன்
சாது ஜனங்களைக் கண்டே தடிபெடுத்தேன் இந்த

2 நேயமான தந்தைதாயைச் சற்குருவைப் பழித்தேன்
ஜெபதபத்தை
நித்திய கர்மங்களைப் பக்தி மார்க்கங்களை ஒழித்தேன்
கைப்பொருளெல்லாம்
காயமோக சுக மாயவாழ்விற் செலவழித்தேன்
உனைத்தொழாமல்
காட்டில் வாழ்மிருகக் கூட்டம்போல நாள்கழித்தேன்
அநுதினமும்

தூயரைக் குறைசொல்லித் தூற்றினேன்—பெரும்
தீயரைத் தினந்தினம் போற்றினேன்—நல்ல
ஞாய வழக்குகளை மாற்றினேன்—பதி
னாயிரம் பொய்சொல்லத் தோன்றினேன்
வாயில் வந்தபடி வம்புகள் தொடுத்தேன்
கோயில் மணியமெனக் குடிகளைக் கொடுத்தோன் இந்த

3\. பூவிலே பெரிய பாவி என்று பேரெடுத்தேன்
புரட்டுருட்டும்
பொய்யும் வஞ்சனையும் செய்யும் மார்க்கந்தனை யடுத்தேன்
உன்னாமந்தன்னை
நாவிலே எனது பாவிலே சொலாமல் விடுத்தேன்
ஞானியைப்போல
நாட்டில் மாய வேஷங் காட்டி என்னை நான்—கெடுத்தேன்
அநுதினமும்

பாவமும் பழிகளுந் தாங்கினேன்—பெருங்
கோபமுங் குரோதமும் ஓங்கினேன்—புண்ணிய
ஜீவனஞ் செய்யாமலே தூங்கினேன்—நல்ல
பாவஞ் செய்யும் வழிநீங்கினேன் தினம்
ஆவலாகப் பிறர் பொருள் அபகரித்தேன்
காவலர் நெறியைக் கடந்து சஞ்சரித்தேன் இந்த

4. வாரங் கூலிகளிற் சோரஞ்செய்து நான்குறைத்தேன்
பிறரிடத்தில்
வாங்கிய பொருள்களை ஈங்கில்லை என்று நான் மறைத்தேன்
பஞ்சத்திலே வியா
பாரஞ் செய்யப் பலசேரில் நெல்லைக் கட்டி நிறைத்தேன்
நல்ல தண்ணீரைப்
பாழிலே சகல நாழிகையும் விழலுக் கிறைத்தேன்
முதலினொடு

நேர வட்டிதனைக் கூட்டினேன்—வெகு
தூரம் அகவிலையை நீட்டினேன்—வழக்
கோரஞ்சொல்லிச் சண்டை மூட்டினேன்—உப
காரஞ் செய்தோர்க்குக் கத்தி தீட்டினேன்
தாரம் பிள்ளைகளுக்குந் தான் செய்தேன் வஞ்சம்
நேரில் வேதநாயகா நின்னடி தஞ்சம் இந்த

---

### 17. இராகம் - சுருட்டி, திசரஜாதி ரூபகம்.

பல்லவி

தேவாதி தேவனே—தயை செய்தருள்வாயே தேவாதி

அநுபல்லவி

பாவ உடலம் எடுத்து நீளும்
பாதகனும் என்னை நாளும்
பந்தப் பகை சாடாமல்
சிந்தைத் துயர் கூடாமல்
நிந்தைப் பழி மூடாமல்
இந்தப்படி வாடாமல் தேவாதி

சரணங்கள்

கற்பகோடி காலம்போல அற்பவாழ்வினை மதித்தேன்
காரணமாக எந்நேரமும் அகங்காரம் நெஞ்சினிற் பதித்தேன்
தற்பரா உன் பொற்பாதம்புயந் தாழ்ந்திடாதென்னைத் துதித்தேன்
சாந்தமாம் யோகாந்த மார்க்கஞ் சார்ந்திடாமற் குதித்தேன்

நற்பதந்தனை நாளுஞ்சார்ந்து
நாசவினைகள் யாவுந்தீர்ந்து
ஞானந்தனிலே நீட
மோனந்தனையே நாட
வானந்தனையே தேட
ஆனந்தமுமே கூட — தேவாதி

2. பாசமாம் பிசாசம் என்மனம் வாசஞ்செய்வதுநிலையே
பாபன் கடுங்கோபமும் பலர் சாபமும் பெருமலையே
நேசமும் விசுவாசமும் பிரகாசமும் எனக்கிலையே
நிந்தையான அகந்தையோடும் என்சிந்தையுங் கடுஞ்சிலையே

ஈசனே என்பாவம் நீக்கி
என்னையே உன் தாசனாக்கி
இன்பக்கடலே சேரத்
துன்பக்கடலே போர
அன்பர்க்கினமே சார
என்பொய்க்குணமே தீர — தேவாதி

3. அன்பர்களிக்க இன்பம் அளிக்கும் ஆனந்தப்பெருநதியே
அனவரதமுங்கன விரதர்கள் அகத்தில் ஒளிருமதியே
துன்பசாகர மென்பதுகெடத் தோன்றிடும் பரகதியே
தொண்டன்வேத நாயகன் மனப் பெண்டகமகிழ்பதியே

நின்பதந்தனை நாளும்ஏத்தி
நேசமாய்க்கவி மாலைசாத்தி
ஆதிப்பழியே தள்ள
வேதப்பயனே கொள்ள
போதத்தினிலே துள்ள — தேவாதி

---

18. இராகம் - பியாக், ரூபக தாளம்.

பல்லவி

இந்த நிமிஷமே பாபநிவர்த்தி
எனக்கருள்வாய் ஸ்வாமி — இந்த

அநுபல்லவி

எந்த நிமிஷத்தில் சாவு வருமோவென்
றேங்கியே நான் பயந்தேனே—உயிர்
நீங்கிடிலென்ன செய்வேனே—சுரர்கோனே — இந்த

சரணங்கள்

1. காலையோ மாலையோ நாளையோ சாவெனுங்
காலக் கணக்கறியேனே—வந்த
வேலை முடியுமுன் ஓலை யனுப்பிட
வேண்டாஞ் சொன்னேன் சிறியேனே—என்னை
ஆண்டா லுனைப் பிரியேனே—பெரியோனே இந்த

2. பொட்டென்று தேகந்தான் சட்டென்று வீழ்ந்திடில்
கிட்ட ஒருவர் நில்லாரே—குழி
வெட்டென்பர் பிரேதத்தை கட்டென்பர் மண்ணைமேற்
கொட்டென்பர் போவர் பொல்லாரே—ஆன்ம
நட்டம் வராமற் கண்பாரே—துயர் தீரே இந்த

3. கப்பல் இல்லாமலே எப்படியேனும்
கடலைக் கடக்க வொண்ணாதே—நாளும்
இப்படி நின்பதத் தெப்பமில்லார்க்கந்த
ஆனந்தவீடு நண்ணாதே—நல்ல
ஞானந் தருவாயிப்போதே—கைவிடாதே இந்த

4. ஆதிமத்தியாந்த ரகிதப் பிரபோத
அபேத புராதன நாதா—நாளும்
காதலுடன் வேத நாயகனுள்ளக்
கமலந்தங்குந் திருப்பாதா—எனக்
கமலந்தர இன்னம்வாதா—கிடையாதா இந்த

---

19. இராகம் - கல்யாணி, அடதாளம் சாப்பு.

பல்லவி

இந்த உபகார மறவேனே—பூமி
அந்தரம் எங்கும் நிறை—கோனே இந்த

அநுபல்லவி

விந்தை நரஜன்மம் நான் மேவ அருள்நோக்கினாய்
தந்தைதாய் மனைசேயர் தந்துகுறை நீக்கினாய் இந்த

சரணங்கள்

1. குருதியாகிய சேறு கூட்டி—நல்ல
கொழுமாமிசச் சுவரை நாட்டி
வரி என்பு விட்டங்கள் பூட்டி—கட்டும்
வடமா நரம்புகளை மாட்டி

இருகாலில் நவவாசல் உடல்மனையை வீக்கினாய்
இன்பங்கள் நுகர ஐந்திந்திரியம் ஆக்கினாய்
அரிய ஆன்மா அங்கு குடியுறப் போக்கினாய்
அந்த ஆன்மாவில் நல்லறிவினைத் தேக்கினாய் இந்த

2. பூமியாகிய விடமத்தாய்—பஞ்ச
பூதாதிஊழியர் சமைத்தாய்
மாமதுர உணவுகள் கொடுத்தாய்—அந்த
வானமாம் பந்தலும் எடுத்தாய்

சோமசூரியதார காதீபம் ஏற்றினாய்
சகவாயுவால் உஷ்ண சோகத்தை மாற்றினாய்
சேம வுணவாக்கவே தேயுவினை ஆற்றினாய்
சீதக்கடங்கொண்டு தண்ணீரை ஊற்றினாய் இந்த

3. கடலாறுகுளம் ஓடை தந்தாய்—மலர்க்
காவுகளும் உதவினா யெந்தாய்
தடமலைதருக்களும் வகுத்தாய்—வனம்
சார்மிருகபக்ஷிகள் பகுத்தாய்

திடமான நவமணி உலோகாதி நீட்டினாய்
ஜெகஜோதியாகவே சிங்காரம் நாட்டினாய்
அடமின்றி நானா விநோதங்கள் காட்டினாய்
ஐம்புலாதிகளுக்கும் இன்பங்கள் ஊட்டினாய் இந்த

4. சிலபறவைக் கான இசைபாடும்—வேறு
சிலபறவை திருநடனம் ஆடும்
பலமிருகம் கார்வேலை புரியும்—நல்ல
பசுவாதி பாலினைச்சொரியும்

மலர்கனிகள் காய்கிழங்கு மாமெலாம் நீட்டுமே
மண்ணன்னம் விளைவித்து வயிறார ஊட்டுமே
சலதாருமெங்களைத் தலைமுழுக்காட்டுமே
சர்வபொருள்களும்நல்ல சந்தோஷம் மூட்டுமே இந்த

5. பித்தர்க்கு நீ செய்பாரகமே—வளம்
பெரிதெனினு மீதற்ப சுகமே
சுத்தர்க்கு நீசெய் போகமே—பரம
சுகமென விரும்பும் என் அகமே

பத்தர் அனுகூலநற் பரமகாருண்ணியனே
பகிரண்டகோடிகள் பரிக்கிடுந் திண்ணியனே

வித்தகசொரூபமே மேவுற் புண்ணியனே
வேதநாயகன் உள்ள மீதுவளர்கண்ணியனே இந்த

---

20. இராகம் - கேதாரகௌளம், ஆதி தாளம்.

பல்லவி

சிந்தைக்குள் உறைந்தும் நீ சிந்தைதுயாந்தனைத்
தெரியாயோ ஸ்வாமி சிந்தை

அநுபல்லவி

அந்தரம்புவியெங்கும் அரசாக்ஷியளிப்போனே
எந்தப்பொருளின்உள்ளும் இருந்தகங்களிப்போனே சிந்தை

சரணங்கள்

1. பாலையும் விஷம் ஆக்கும் பாம்புபோல் கொடுமனம்
பலசுகத்தையுந் துன்பம் ஆக்குமே
பூலோக மெல்லாம்வச மாயினும்வேறொரு
புவனத்தையும் பிடிக்க நோக்குமே

காலமுழுதும் இந்தக் கருத்தேயாதனுரூபம்
கலியாணவீட்டிலும் கட்டிக்கொண்டழும்சோபம்
மேலவனே யெனக்கிது வாய்த்ததென்னபாபம்
வேதநாயகனே பாராயோ யென்பரிதாபம் சிந்தை

2. இருதலைகொள்ளிநடு விருக்கும் எறும்புபோல
எந்நாளுந்தொலையா விசாரமே
ஒருசாணுகிய உதிரகுழி அடைக்க
உலகில்படுங்கஷ்டம் அபாரமே

தரணியின் வாழ்வென்பது தானே விஷவிருக்ஷம்
சார்வதா யிதில்வரும் சங்கடம் கோடிலக்ஷம்
தருமயேகாந்தநிலை சார்தல் உத்தமபக்ஷம்
சர்வா நுகூலா உனக்கெல்லாம் பிரத்தியக்ஷம் சிந்தை

3. போர்க்களநடுவிலே குடியிருப்பதுபோல
புலச்சத்துருக்களின் போராட்டமே
சேர்க்குந்தசைவடிவாந் தேகமிதுபிணியுந்
தீவினைகளும் வளர்தோட்டமே

பார்த்தன் இதுவே ஆசாபாச நடனசாலை
பகலும் இரவும்இது படியுமே மோகவேலை
தீர்க்க வைத்தியர்க்குத் தினமும் கொடுக்கும்வேலை
தினம் வேதநாயகா சேர்த்தேன் உன்திருக்காலை — சிந்தை

---

## 21. இராகம் - யமுனா கல்யாணி, ரூபக தாளம்.

பல்லவி

சரணம் சரணம் நாதா—உன்
சரணம்தா ஒண்ணுதா — சரணம்

அநுபல்லவி

திரணமாகிய காயமே—இதில்
தினம் அனந்தம் அபாயமே
மரணம்வரும் முனமே—பெற
மகிழ்ந்தருள் சகாயமே—கோடி — சரணம்

சரணங்கள்

1. பாவியென் இருதயமே—பல
பாதங்களின் மயமே
மேவிடுந்துர் விஷயமே—வினை
விலக்கி அருள்நன்னயமே

மாவினைகளை மாற்றுவாய்—எதிர்
வந்தென்சிந்தையில் தோற்றுவாய்
சேவைதந்தெனைத் தேற்றுவாய்—இந்தத்
தீயனைக்கரை யேற்றுவாய் — சரணம்

2. மதம் இராகதுவிசேஷம்—பொய்
வஞ்சகம்பல தோஷம்
எதிலும்நான் விசேஷம்—எனக்
கில்லை புண்ணிய விசேஷம்

மதனப்பேயை ஓட்டுவாய்—நல்ல
மார்க்கத்திலெனைக் கூட்டுவாய்
விதனநரகைப் பூட்டுவாய்—உன்
வீட்டுக்குவழி காட்டுவாய் — சரணம்

3. தாசர்கள் பரிபாலா—கன
சாத்விககுண சீலா
நீசர்கள் பிரதிகூலா—சத்ய
நீதியுறு செங்கோலா
ஆசறுமுதல் நூலனே—அகி
லாண்டகோடி விசாலனே
நாசாகித மூலனே—வேத
நாயகன் அநுகூலனே சரணம்

---

22. இராகம் - கற்கடா, ஆதி தாளம்.

பல்லவி

சீலம்நீதா தேவநாதா
சிறியேன்மீது வாதா ஆபேதா சீலம்

அநுபல்லவி

மூலகாரண தயாபரவேதா
மோக்ஷசாம்ராச் சியப்பிரதாதா சீலம்

சரணங்கள்

1. நன்மைதின்மைஇன்ன தென்பதுதெரியேன்
ஞானமார்க்கந்தனையே யநுசரியேன்
சின்மயானந்தனே ஜெபம்புரியேன்
தீயனானநான் பாபத்திற்பெரியேன் சீலம்

2. தாயிருக்கப்பிள்ளை தயங்குதல்சரியோ
சாமி நீ என்மனம் வாழவும்வரியோ
நீயிருக்க என்தன் துன்பம் உபரியோ
நீயேதாமசிக்க என்னுடல் கிரியோ சீலம்

3. ஜீவ்சிஷ்டிஸ்திதி லய அதிகாரா
ஜென்மசாபல்லியப் பிரதான உதாரா
தேவதேவகன பூசிததீரா
சிறியன்வேதநா யகன்உபகாரா சீலம்

---

## 23. இராகம் - உசேனி, ஆதி தாளம்.

பல்லவி

நின்பதமே துணை ஐயா—மனத்
துன்பம் அகல அருள் செய்வாய் நின்

அநுபல்லவி

இன்பமகோததியே—இனியதயாநிதியே
அன்பர்பாகதியே—அமரர்க்கதிபதியே நின்

சரணங்கள்

1. என்மனம் இளகாத பொருப்பே—மாயை
என்னுறக்கும் அதிற் குடியிருப்பே
தன்மமே அதற்கரு வருப்பே கெட்ட
தாமசகுணமென்றால் விருப்பே
நன்மைகெடுக்கும் இசை நாசக்கொடுநெருப்பே
தின்மையேயெல்லாம் அகலத் திருவருட்கண்திருப்பே நின்

2. ஏதும் அறியேன் ஞான சாஸ்திரம்—புவ
னேசா உனக்கு நான் எம்மாத்திரம்
சோதனைக்கெளியேன் அபாத்திரம்—அதி
தூயனே என் இன்னம் க்ஷாத்திரம்
வேதனைமிகக்கொண்டு மெலிவுற்றேன் அகோராத்திரம்
சாதகமுறவே நீ தருவாய்மெய்ஞ்ஞான நேத்திரம் நின்

3. நீசனென்வினைக்கெல்லாம் மூலம்—எந்தன்
நெஞ்சம்செய்வதும்பிரதி கூலம்
பாசபந்த உலக ஜாலம்—தன்னில்
படிந்து நொந்தேன் பலகாலம்
ஈசனே கேளாயோ ஏழை நானிடும்—ஓலம்
தாசன்வேதநாயகன் தனக்குநீயருள் சீலம் நின்

---

## 24. இராகம் - முகாரி, ஆதி தாளம்.

பல்லவி

ஆள்வாயெனதுள மூள்வாயெனக்குந்தன்
அடியிணையே துணையே ஆள்

அநுபல்லவி

நீள் சுகக்கனியனே நேசருக்கினியனே
நாள் வளர்தனியனே நபமறைத்தொனியனே ஆள்

சரணங்கள்

1. பேதைநான் பயனில்லாப் பேச்சிற்சி சண்டப்பிரசண்டம்
பிறரையக்குவதிற் பெரியஉற்பாதபிண்டம்
வேதைவினைஎனக்கு விளைசருக்கரைகண்டம்
விரைந்தருள்புரிஉனக் காயிரங்கோடிதண்டம்
வேதனே வரப்பிர சாதனே ஆசீர்
வாதனே சுரர்புகழ்கொள்—காதனே—நாதனே—எனை ஆள்

2. மனமெனுந்தூங்குக்குக் கன அறமோ உபேக்ஷை
வாதனைநீக்கிடாமல் எதின்னமும் பரீக்ஷை
தினகரரூபனே திவ்வியமெய்ஞ்ஞான தீக்ஷை
திடமுடன்கொடுத்தருள் அதுவேஎனதபேக்ஷை
தேவனே மனோ பாவனே மறைசொல்
நாவனே—தயைநிறை—சுபாவனே—ஜீவனே—எனை ஆள்

3. நிகரில்கனதெய்வீக நின்மலசுலக்ஷணா
நித்தியம்நினையும்பக்தர் நெஞ்சப்பிரதக்ஷணா
சகலஜீவாத்மகோடி தாங்கும்சம்ரக்ஷணா
சாஸ்திரம்புகலும்சுரர் ஸ்தோத்திராமிர்தபக்ஷணா
தாங்குவாய்—நெஞ்சில்—ஓங்குவாய்—துயரம்
நீங்கவே—வேதநாயகன்—பாங்காநின்—றனுதினம் ஆள்

---

25. இராகம் - ஆரபி, ஆதி தாளம்.

பல்லவி

தேவநாயகனே—என்மீதினுன்
திருவுளம் இரங்குவையே தேவ

அநுபல்லவி

ஜீவன்முக்தியூர்ஜித—சீலர்பிதுரார்ஜித
தாவில் அதிபூஜித—சர்வசமயோசித தேவ

சரணங்கள்

1. காதலாமலகம்போல் உனக்கு யாவுந்திர்ஷ்டாந்தம்
கர்த்தனே அறியாயோநீ எனதுவிர்த்தாந்தம்
பரவும் பதங்களென்றால் பாலருக்கும் ஆனந்தம்
பலபதங்கேட்டுந்தயை பண்ணாததேதோ சித்தாந்தம்
பற்பல—நற்பல—உற்பவ—விற்பன
கற்பனை—செப்பரும்—அற்புத—உற்பன தேவ

2. தனமிகவேண்டுவோர்க்குச் சல்லியோடுதானமோ
தானமுள்ளோர்க்குக்கானல் ஜலமதுபானமோ
கனசுகந்தேடெனக்குக் கவலைசன்மானமோ
கதியருள்வாயுனக் கதுபாரதீனமோ

கர்த்த—சமர்த்த—பிரசித்த—சம்வர்த்தன
பக்தர்கள்—சுத்த—அசுக்துறு—நிர்த்தன — தேவ

3. தினமும் அனந்தம்பாவஞ் செய்வதென் சம்பிரதாயம்
சிந்தைக்கறங்கசப்பு சேர்வேப்பிலைக்கஷாயம்
இனவேதநாயகனென் றேற்றேன்உன்னுமதேயம்
எனக்கல்லாவிடினும் அப் பெயர்க்கேனுஞ்செய்சகாயம்

எம்பர—உம்பரும்—அன்பரும்—நம்பிய
அம்பர—சம்பிரம—இன்பம்—நிரம்பிய — தேவ

---

## 26. இராகம் - அடாணு, ஆதி தாளம்.

பல்லவி

ஈசாநின்பொற்பாதமலர் நம்பினேன்—என்னை
இக்ஷணமேவந்து ரக்ஷணஞ் செய்தருள் — ஈசா

அநுபல்லவி

தாசர்மனகம லாசனகேசா
சாசுவதயோக சாம்பிராஜ்யகிரகேசா
ஆசைக்கினிய அவாங்மனோகோசர
அண்டப்பிரமாண்ட அகண்டசராசர — ஈசா

சரணங்கள்

1. எத்தனையோபேர் சுகித்தமர்வீட்டில்
எனக்கிடம் பூச்சியமா—தயை
சித்தங்கொள்வாயெனப் பித்தனெனக்குத்
தினமனோராச்சியமா—நல்ல

நித்தனே இன்ப மிகுத்தமுக்திநலன்
நீதரில்வானவ போதுவபோகலன்
சத்தில்வழக்கவர் பேசினென்னபலன்
தாயேஉற்றதுணை நீயேபின்வேறிலன் — ஈசா

2. மாகுணபாக சையோகமின்றிப்புவி
வாழ்ந்தவர் தாமெவரோ—எங்கும்
ஏகும்நெஞ்சுன்னரு காகவாரிதற்
கேகுறக் குச்சுவரோ—விஷ

நாகமாமாயைக்கெங்குஞ் சர்வகொள்ளேயோ
நான்பயனில்லாமற் பேசிடுங்கிள்ளேயோ
ஆகிலுமென்புத்தி தான்சுத்தவெள்ளேயோ
ஐயனேநானென்ன தாயில்லாப்பிள்ளேயோ ஈச

3. வந்துன் தரிசனந் தந்தருளிலென்
மனக்குறை தீரேனே—உந்தன்
சுந்தரபாதமென் சிந்தனையூனறிற்
சுகக்கடல் சாரேனே—பெரும்

பந்தநெருப்புக்கென் சிந்தனைசெத்தையா
பாவியென்றனேக்கை நீவிடில்சத்தையா
விந்தைநலந்தந் திடல்பெருவித்தையா
வேதநாயகன் பங்கென்னசொத்தையா ஈசா

---

## 27. இராகம் - துஜாவந்தி, ஆதி தாளம்.

பல்லவி

ஆதியே பரஞ்சோதியே—எனே
ஆதரித்தருள்வாயே ஆதியே

அநுபல்லவி

ஓதிஉணரவொண்ணு தோங்குங்குணகர
நீதிவடிவமுறு நின்மலசாகர ஆதியே

சரணங்கள்

1. உலககாரியத்தில் நான்வெருகிராணி—உன்னே
உன்னுவதிற் கேவலம் அப்பிராணி
நலம் என்பதெனக் குண்டோ மாகாணி—எந்தன்
நவைஏற்றபோதுமோ ஆயிரந்தோணி

மலவசமாகிச் சோர்ந்தேன்
தலைவாஉன்னடி சார்ந்தேன்
மதிக்கும் அடியர்கள் துதிக்கும் ஆரிய
கதிக்கு நானென உதிக்கும் வீரிய ஆதியே

2. கண்ணுள்ளபோதல்லவோ கண்காட்சி—சீவன்
கழியுமுன்னல்லவோ புண்ணியமாட்சி
மண்ணில் எனக்கு ஞான அரசாட்சி—மிக
வாய்க்கும்படி ஐயனே நீகடாட்சி

எண்ணரிய பிரதாபா
நண்ணரும் சுப்பிரதீபா
இணங்கும் அமரர்கள் வணங்குபெருவர
மணங்குலாவு சுகுணங்கொள் குருபர ஆதியே

3. தீதுபொருத்தல் தெய்வகுல தர்மமே—தீய
செய்கைகளே மனுஷகுல கர்மமே
ஓதிவிட்டேன் எனக்கென் உள்மர்மமே—என்மேல்
ஓகோ ஐயனே இன்னம் ஏன்வர்மமே

பாத கமலம்அணி வேதநாயகன்பணி
படர்ந்ததிருவருள் அடர்ந்திடும்பிரம
கடந்தஞானியர் தொடர்ந்தசம்பிரம ஆதியே

---

28. இராகம் - கேதாரம், ஏக தாளம்.

பல்லவி

தேவனே உன்னை நம்பினேன்
அடியேனை ஆண்டருள் தேவனே

அநுபல்லவி

தேவா—துரித—அபாவா—சுகுண—சுபாவா
மகாநு—பாவா—வாவா தேவனே

சரணங்கள்

1. ஐயாநிலை அறு—பொய்யாம் உலகினில்
நையாவகை அருள்—செய்யாயோ உயர் தேவனே
2. வாராயோ முகம்—பாராயோ அருள்
கூறாயோ வினை—தீராயோ கன தேவனே
3. பெரியாய்கைவிடல்—சரியாநான்வினை
புரியாவிதம்அருள்—சொரியாயோ உயர் தேவனே

4. நொந்தேன்வினைசுட—வெந்தேன் உனதிடம்
வந்தேன்சுகமில்லை—தந்தே அருள்புரி தேவனே

5. நாதா அருளஒண்—ணுதாமனம் இரங்
காதா அறநினம்—வேதநாயகன்பணி தேவனே

---

### 29. இராகம் - காம்போதி, ஆதி தாளம்.

பல்லவி

பரனே அடியர்மனே—கரனேநிமலதின
கரனே நீ அருள்வரனே பரனே

அநுபல்லவி

உரனேமிகும்புவன தரனே அகண்டசரா
சரனேபரமசுக கரனேதீரனே அரும் பரனே

சரணங்கள்

1. என்னைவந்திரக்கும்ஏழை தன்னைநான் தள்ளிவிடில்
ஈசனேகோபம் பண்ணுயோ—தந்தை
அன்னையே உனையிரக்கும் என்னை நீ தள்ளில் எனக்கும்
அவ்விதமென்றே எண்ணுயோ

முன்னைநீ அனேகரைஉன் பொன்னடியிற் சேர்த்தனே
இன்னமும்பலபேர்தமைப் பின்னும் வினைதீர்த்தனே
என்னவே நான்கேட்டுன்மீது சொன்னேன் பலகீர்த்தனை
பின்னையொன்றும்வேண்டேன் அருள் உன்னையிதென்
[பிரார்த்தனை பரனே

2. உத்தமனே நான்பெரிய பித்தனுயினும்—உனை
அடுத்தவனென என்னுயோ—பாரில்
சித்தமிசைபைத்திய மிகுந்த பாலகனைக்கை
விடுத்தகலுவாள் தாயோ

முத்தொழிலில் முதல்தொழில்கொண்டுசெய்தாயென்சடம்
மூத்தஞானம் அளித்தெனைக் காத்தருளாயேன் ஹடம்
அத்தனே அவ்விரண்டாந் தொழிலில் என்னசங்கடம்
அதுதரில்மூன்றுந்தொழிற் கஞ்சினேன் இதுதிடம்பரனே

3. பாடுகவியிற் கற்பனை தேடுவதல்லால் உன்னருள்
கூடும்வகை குறியேன்—என்னை
நாடும்எவரோடுமே வாதாடுவதல்லால் என்வாயை
மூடும்வகை அறியேனே
வாடுதலில் பாதமலர் சூடு பெரியோராக
வாசபுவனேசவளர் பாசவினைமாரக
வீடுதவுகியாக அலை யாடுகடற்பாரக
மீதுவேதநாயகன் எப்பொழுதுமே கொள்தாரக பானே

---

30. இராகம் - பியாகடை, திரிபுடை தாளம்.

பல்லவி

அம்புயப்பதம் நம்பினேன் ஐயா—பரலோகசாதக
சம்பிரமத்தை விரும்பினேன்மெய்யா—கனதியாகக்கையா

அநுபல்லவி

தம்பமாம் அவலம்பம்வேறில்லையே—தேவாதிதேவர்கள்
சகிதமாகிய சுகிதமாமல்லையே—மெய்ப்போதகில்லையே அம்புய

சரணங்கள்

1. தினமும்அலையுமென் மனமேகீசகமா—அடியேனுன்பால்இஷ்ட
சித்திவேண்டியே நித்தியம்யாசகமா
கனஅநீதனென் மீதரோசகமா—என்சொல்உன்காதுக்குக்
கடினமாகிய கொடியவாசகமா—நானொருமசகமா அம்புய

2. மண்ணின்வாழ்க்கையில் எண்ணில்யாதனையே—அதுநீக்கவே
மண்ணிடாமலேன் இன்னஞ்சோதனையே [யருள்
திண்ணியம்பெறு புண்ணியசாதனையே—அடியேனுக்கேஸ்வா
தீனமாகச்செய் ஞானபோதனையே—செய்தேன்வந்தனையே
அம்புய

3. எண்ணிமகிழ்ந்திடு புண்ணியவிக்கிரகமே—பரிசுத்தசீலர்கள்
இஷ்ட பூரண துஷ்டநிக்கிரகமே
வின்னினோர் தினம் நண்ணுசுகக்கிரகமே—இனிநீபுரிந்தருள்
வேதநாயகன் தனக்கனுகிரகமே—பணியார் உக்கிரகமே அம்புய

---

## 31. இராகம் - ஆகிரி, திரிபுடை தாளம்.

பல்லவி

சம்மதி யெனக்கு மெய்யனே—உனை நினைக்க
நன்மதி தந்திடில் ஐயனே சம்மதி

அநுபல்லவி

அம்மவென் றழ மேன்மேலும்
வெம்மனநோயே சூழ்ந்தாலும் சம்மதி

சரணங்கள்

1. தன்னைஉன்னவே கூடாதென்றே—தடைசெய்வோன்தான்
இந்நிலத்துண்டோ குணக்குன்றே

நின்னையே தொழவிரதம்
நேர்துணை அநவரதம்
உன்னவே என்மனோரதம்
உதவுவாய் கருணாமிர்தம்
ஓங்கிவளர்தனம் நீங்கிபொழியினும்
வீங்கியுடல்பிணி தாங்கியழியினும் சம்மதி

2. பதமலர்மேல் ஆசைகொண்டேனே—உலகவாழ்வு
சதமலவென் றுண்மைகண்டேனே

நிதமுனைப் பணியுமதி
நீதர இலையோவிதி
அதிற்குறையுமோ உன்னிதி
அண்டினேனு னுன்சன்னிதி
அடரும்வறுமையோ டிடர்கள் சூழினும்
படருமனந் துயர்க் கடலில் ஆழினும் சம்மதி

3. உத்தமபிரம சைதன்னியமே—சௌஜன்னியமேமெய்ப்
பக்தர்கள் அல்லாதார்க்கன்னியமே

சுத்தமதுர பாஷணா
சோபனகுண பூஷணா
வித்தகசுவி சேஷணா
வேதநாயகன் போஷணா
விலகியேயெனை உலகமநகைக்கினும்
கலகமாகவே பலர்கள்பகைக்கினும் சம்மதி

---

## 32. இராகம் - கேதாரம், ஆதி தாளம்.

பல்லவி

ஐயனே—உயிர்—மெய்யனே ஐயனே

அநுபல்லவி

உய்யவே அருள்புரி செய்யபதந்தந்தெனை ஐயனே

சரணங்கள்

1. ஈசனேநான் ஆத்ம இரக்ஷண்ணியமே—பெற
இரங்கியருள்கடாக்ஷ வீக்ஷண்ணியமே
தாஸன்நானுனக்கென்னுந் தாக்ஷண்ணியமே—கொண்டு
தந்தருள்வாய்விவேக தீக்ஷண்ணியமே ஐயனே

2. இகநிதிஅழிந்திபோம் நில்லாது—அதை
ஈந்தனம்போது மென்றால் செல்லாது
நிகழ்நித்தியசுகந்தந்தால் அல்லாது—சற்றும்
நில்லாமல்நச்சும் என்வாய் பொல்லாது ஐயனே

3. கோதையர் மைந்தர்முதற் பரிஜனமே—சந்தைக்
கூட்டம் அவர்மேற்கொள்ளுங் கரிசனமே
வேதைதரும் இது நிதரிசனமே—அருள்
வேதநாயகனுக்கருள் தரிசனமே ஐயனே

---

## 33. இராகம் - ஜயந்தஸ்ரீ, ஏக தாளம்.

பல்லவி

நாதா நிரந்தர விநோதா—உந்தன்
பாதார விந்தம்எனக் காதாரம்தாதா நாதா

அநுபல்லவி

வேதாந்தசார நயபோத—பஞ்ச
பூதாந்தகால விபரீதா—பிரக்கியாதா—ஜெக நாதா

சரணங்கள்

1. பேசருஞ்சர்வ புவநேசா—நல்ல
தாசர்மனு லயவாசா—பவநாசா—ஜெக நாதா

2. மாவரந்தராலாகாதா—வினை
போவெனநீசொலிற் போகாதா—சாகாதா—புவி நாதா

3. மாயையின் சபதமே நிசமா—அந்தப்
பேயைக்கொள்ளுவதுனக் கவசமா-தாமசமா-தெய்வ நாதா

4. அடியன்மனங் கடின இரும்பா—அருங்
கொடியவினை அதற்குக் கரும்பா—நானோர் துரும்பா-ஜெக நாதா

5. ஆதிமத்திய அந்தரகிதா—சுயஞ்
சோதிமயஅமரர் சகிதா—கனசுகிர்தா—மகி நாதா

6. மாயாந்தகாரம் அகல கிரணா—வேத
நாயகன்தொழுமலர்ச் சரணா—அந்தக்காரணா—தெய்வ நாதா

---

## 34. இராகம் - புன்னாகவராளி, ஆதி தாளம்.

### பல்லவி

காக்கவேண்டும்—கடவுளே—நீ காக்கவேண்டும் காக்க

### அநுபல்லவி

காக்கவேண்டும்—எனை அன்பன்—ஆக்கவேண்டும் என்கவலை
நீக்கவேண்டும் பாவமெலாம்—போக்கவேண்டும் தினமெனைக் காக்க

### சரணங்கள்

1. பண்ணியவினையுமனம்—எண்ணியவினையும் வாக்கில்
நண்ணியவினையுந்தீரக்—கண்ணியவாந்தந்தென்னைக் காக்க

2. ஆரணனேநீகொடுத்த—தாரணிச்செல்வத்தின்மனம்
பூரணமானேன்பவநி—வாரணசுகந்தந்தெனைக் காக்க

3. எந்தவேளைமரணமோ—அந்தவேளைவந்துன் அர
விந்தமலரேநிகருஞ்—சுந்தர அடிதந்தெனைக் காக்க

4. பூதமுதலானஜீவ—பேதகாரணனே நாளும்
வேதநாயகன்பணிபிரக்—கியாதபூரணனே எனைக் காக்க

35. இராகம் - கேதாரகௌளம், திரிபுடை தாளம்.

பல்லவி

ஈசனே மல—நாசனே மன—வாசனே பிர—காசனே ஈசனே

அநுபல்லவி

பாசயிருளினை நீக்குவாய்—உந்தன்
பதத்துக்கென்னை யுறவாக்குவாய் ஈசனே

சரணங்கள்

1. சிறியன்மதிவெறும் ஸ்தூலமே—அதன்
செயலெலாம் அலங்கோலமே
குறிகொள்பாச நிர்மூலமே—செய்து
குணந்தந்திட இதுகாலமே
அறியநானிடம் ஓலமே—செவிப்
பொறிகொண்டுத வனுகூலமே

2. அடருங்காமங்கொள் பேழையே—நிகர்
ஆகும் உடலெனும் பாழையே
திடமென்றுன்னும் நான் ஏழையே—குறை
தீரக்கற்றறி மோழையே
தொடுசிலேட்டுமங் கோழையே—உயர்ந்
திடுமுன்தொலைபவப் பீழையே ஈசனே

3. என்னைக்கெடுத்திடக் கச்சையே—இடை
இருக்கிக்கட்டிக்கொண் டிச்சையே
முன்னைவருந்திடக் கொச்சையே—கொண்டுன்
முன்வந்திரந்தனன் பிச்சையே
உன்னுமாவரத் தியாகமறைமொழி
பண்ணும்வேதநா யகன்வெவ்வினையொழி ஈசனே

---

36. இராகம் - ஆனந்தபைரவி, ரூபக தாளம்.

பல்லவி

நிரந்தரனே—மா—துரந்தரனே—கன
நிர்மலத்துவ—தர்மகர்த்தத்துவ நிரந்தரனே

அநுபல்லவி

பரந்தபேரருள்—சுரந்து காத்தருள்
வரந்தந்தென்வினை—விரைந்து தீர்த்தருள் நிரந்தரனே

சரணங்கள்

1. சித்தமிரங்கியென் எத்தனை தீதையை
செய்யிற் பிழையேனோ — கன
நித்தனே என்பிழை எத்தனையென்னினும்
நீங்கித் தழையேனோ — நல்ல
உத்தமம் என்னிடம் சுத்தசரித்திரம்
ஒன்றேபலவிதம் என் துர்ச்சரித்திரம்
நித்தம் என்நெஞ்சம் உடுத்தாமல் வஸ்திரம்
நீக்கி எனைச்சேர் சௌபாக்கிய சமுத்திரம் நிரந்தரனே

2. உதிமதிகதிர் முதலெல்லாஞ் செல்லும்
உன் ஆணைவழியே — எந்தன்
மதியொன்றே அந்த விதியைக்கடந்து
வளர்க்கு மாபழியே — இந்தப்
பொதிமதிக்கேன் தனியாசாக்ஷியே
புனிதஞ்செய்குவ துன்பெயர்மாக்ஷியே
பதிதனெனன்பதற் கென்செய்கைசாக்ஷியே
பாவனனீயென ஈவாய்அத்தாக்ஷியே நிரந்தரனே

3. பாரிருள் நீக்காத சூரியனாலே அப்
பாருக்கென்னசாரம் — ஞான
ஆரியனேஉன்முன் சாரலாமோ என்
அகத்தில்அந்தகாரம் — நாளும்
சாரமில்லாச்சமு சாரகோலாகலம்
சாருமெனக்கென்றுந் தீராவியாகூலம்
வீரனேநீயறி வாயென்பலாபலம்
வேதநாயகனே நீதருவாய்நலம் நிரந்தரனே

---

37. இராகம் - ஆனந்தபைரவி, ஆதி தாளம்.

பல்லவி

அப்போதனைத்தொழல் அரிதையா — உனை
இப்போதேதொழ அருள்செய்வாய் அப்போ

அநுபல்லவி

முப்போதும் உணரு முதலேசுரர்தொழும்
அப்பாமரணம் உற் றடியேன்உடல்விழும் அப்போ

1. இடமாற்பிற்பாறைபோலே இரண்டுகோழைகள்கட்டும்
சிறிதும்பேசாதவண்ணஞ் சேர்ந்திருகிப்பல்கிட்டும்
படர்ஜீவவாயுவெளிப் படஎங்கும்ஓடிமூட்டும்
பாரிதுவேளையெனப் படுமாயைதொடைதட்டும்

பலங்கொள்உணர்வது கலங்கி நிலைகெட
இலங்குடலைஉயிர் விலங்கிமெலிவுறும் அப்போ

2. மனைவிசெய் கடன்காரர் மண்டிவார்த்தை விரிப்பார்
வகையெமக்கென்னவென்று மணல்கயிறுய்த்திரிப்பார்
மனையிற்பொருளையெல்லா மாவலைபோட்டரிப்பார்
வகையொன்றுமின்றேற்கையால் மணித்தொண்டையை
[நெறிப்பார்

மடங்குகழல்கா முடங்குசெயலொடு
திடங்கொள்காணமும் அடங்கிமாளுறும் அப்போ

3. அழுகைக்குரலும்பல முழக்கமும் நாளுபேதம்
ஆகப்பலபக்கத்தும் அடக்குமேகடநாதம்
விழுகையுறும்உடலின் வேதனையும் பிரமாதம்
வேதநாயகனே அப் போதுனை உன்னலேதம்

விரிக்கும்இடர்பல தரிக்கும்உடலினை
முரிக்கும்இசிவொடு மரிக்கும்வேளையில் அப்போ

---

38. இராகம் - காம்போதி, ஆதி தாளம்.

பல்லவி

எவ்வகையிலும் நானே—நல்வழிபற்றி
உய்வகை யருள்கோனே எவ்வ

அநுபல்லவி

செவ்வழிநிற்போர்மனத் தேன்கள் வளரும்பூவே
பௌவமாகப்பேரின்பம் பழுக்குங்கற்பகக்காவே எவ்வ

சரணங்கள்

1. வறியர்க்கிடவென்றுலென் குறியகைகளிற்குலை
வாங்கநீட்டின்உலகும் வானமும்எந்தழலை
பிறர்நோய்செய்யில்எனக்குப் பெருங்கோபாக்கினிச்சுவாலை
பேதைஎன்பிழைஎழு திடவேண்டுங்கோடியோலை எவ்வ

2. நல்வழிநடக்கவென் றால்இருகாற்குந்தளை
நாளுந்துர்வழிநடப் பதில்லெனக்குண்டோகளை
புல்வினையேன்செவி பொய்கள் நுழையுந்தளை
புண்ணியோபதேசமென்றால் புகஅதில்லதுதுளை எவ்வ

3. உன்னை துதிக்கவென்றால் உலகில்என்வாய்க் குநோயே
ஊர்வம்புபேசஎனக் குடம்புமுழுதும்வாயே
மின்னைநிகர்பிரபஞ்ச வேதனைநீக்குவாயே
வேதநாயகனுக்குச் சாதகமான தாயே எவ்வ

---

39. இராகம் - செஞ்சுருட்டி, ரூபக தாளம்.

பல்லவி

கதியிதென்முகம் பார் ஐயா
கதிநினையன்றி ஆர் ஐயா கதி

அநுபல்லவி

மதியுள்ளோர்கள் சுகிக்கும் அமிர்த
வாரியே—அருள்—மாரியே கதி

சரணங்கள்

1. உனக்கென்எண்ணம் அந்தரங்கமா
உதவிதான்செய்யிற் பங்கமா
எனக்கிங்கக்ஷய அங்கமா
இன்னமென்ன ஆடங்கமா
தனக்குநிகரில் லாத ஞான சாகரா குணாகரா கதி

2. அதம்செய்யும்வினை கற்கண்டோ
அதைத்தொலைப்பதென் பலங்கொண்டோ
நிதம்நான்செய்வது வீண்தொண்டோ
நீயல்லாற்கதி வேறுண்டோ
பதகமங்கள் பாவும் பக்தர்கள்—பாக்கியமே—மனோக்கியமே
கதி

3. அன்னைக்குபிள்ளைமேற் குரோதமா
அருள்செய்வது பிரமாதமா
வினைக்குநான் முதற்பாதமா
விலங்கஇன்னம் விவாதமா
நினைக்கும்வேத நாயகன்பணி—நீதனே—பிரபோதனே கதி

40. இராகம் - கமாஸ், ரூபக தாளம்.

பல்லவி

ஜாலஞ்செய்வ தேதோ ஐயா
சீலம் ஈயொண்ணுதே மெய்யா ஜாலஞ்

அநுபல்லவி

ஞாலமெல்லாந் தாங்குங்கையா
நற்குணமில் லார்க்குவெய்யா ஜாலஞ்

சரணங்கள்

1. பெண்டுபிள்ளை யோடினமே
பேய்ச்சுவை படர்வனமே
அண்டும் இவரால்தினமே
ஐயையோ நொந்தேன்மனமே ஜாலஞ்

2. பாழுமனமே மற்கடம்
பண்ணும் அகடவிகடம்
ஊழ்வினை தரும்சங்கடம்
ஒழித்துநீ யருள்வாய்திடம் ஜாலஞ்

3. நீதிவழுவாதச் செங்கோலா
நித்திய சங்கீதலோலா
வேதியர் பரவுஞ்சீலா
வேதநாயகன் சேர்காலா ஜாலஞ்

---

41. இராகம் - சாமா, திரிபுடை தாளம்.

பல்லவி

வேதநாயகனே எவ்விதமும் உன்
பாதமலர் அருளே வேத

அநுபல்லவி

போதநாயகனே பொய்நீங்கிய
புனிதநாயகனே மெய்தாங்கிய வேத

சரணங்கள்

1. என்னுமனமேதுர்க் குணங்கொள்பாண்டம்
ஏதும் அறிகிலன் ஞானகாண்டம்

பண்ணும்பாவங்களே பிரமாண்டம்
பகரும்வார்த்தைகளே அபாண்டம் வேத

2. மண்ணில்அநுதினம் பூததேகம்
வளர்ப்பதெனக் ககலாஉத்தியோகம்
புண்ணியஉடல் வளர்த்திடும்வைதீகம்
பூண்டிலேன் அருள்வாய் விவேகம் வேத

3. விதனவிஷதரு கிரகஸ்தாச்சிரமம்
விருப்புவோர்க்கிதில் விலகிடாச்சிரமம்
நிதங்கொண்டேன் இந்த வாழ்விலே பிரமம்
நீங்கவேதநாயகனே அருள்கிரமம் வேத

---

## 42. இராகம் - காம்போதி, ஆதி தாளம்,

பல்லவி

எனக்குக் காட்டியவீட்டை—எனக்குக் கொடாதிருப்ப
தென்னநாயம் ஸ்வாமி எனக்கு

அநுபல்லவி

இனிக்கும் அவ்வீடுசெய்த தெங்கள்நிமித்தமே
என்றுநீசெய்யவில்லையோ வாக்குத்தத்தமே
உனக்குநான்பிள்ளையென்ப துலகப்பிரசித்தமே
உவந்துகேளாயோஎன் பிரலாபசத்தமே எனக்கு

சரணங்கள்

1. சித்தவிகாரமுறு நார்க்குச்செய்யிவ்வுலகம்
சிறப்புள்ள தெனில்கோனே—நல்ல
உத்தமர்க்கமைத்தநித்தி யானந்தமுத்தினியின்பம்
உணர்வதெப்படி நானே
சுத்தமணிபொன்அங்கே துரும்புகள் ஈட்டமே
தொல்லுலகின்பமெல்லாந் துன்பம்போல்ஓட்டமே
அத்தமியாநித்திய சூரியர் அன்பர் கூட்டமே
அநுதினம்எனக்கந்த வீட்டினில்நாட்டமே எனக்கு

2. முகமுகமாகஉனைத் தரிசிக்கும்பாக்கியத்தை
மொழியநினைக்க ஒண்ணுமோ—இந்த
இகமிசைமனமொடு புலன்கட்கெட்டாதஅந்த
இன்பம்எப்போது நண்ணுமோ

அகமிலைசஉன்னஉன்ன ஆனந்தம்பொங்குமே
ஆயிரங்கோடி சூரியர் ஒளிமங்குமே
நிகரறுகீத விநோதங்கள் எங்குமே
நிரதிசயானந்தம் நிரந்தரம் தங்குமே — எனக்கு

3. இகமனைக்கட்டிநரர் குடும்பப்பிரதிஷ்டைசெய்த
இணையறும் எந்தாயே—நித்திய
சுகமனை தன்னில் பிரவேசிக்கவே நல்ல
சுதந்தரம்அருள்வாயே
அகிலலோகப்பிரபஞ்ச நாடகசூத்திரனே
அற்புதபரமநித்தி யானந்தக்ஷேத்திரனே
நிகரறுசௌந்தர நிர்மலகாத்திரனே
நிதம்வேதநாயகன் தொழுங்குணபாத்திரனே — எனக்கு

---

## 43. இராகம் - செஞ்சுருட்டி, ஆதி தாளம்.

### பல்லவி

ஐயனே உன் அழகைக்காண
ஆசைநான் கொண்டேனே — ஐயனே

### அநுபல்லவி

வையமீது பல அழகையும்
வகைவகையாய் வகுத்துக்காட்டும் — ஐயனே

### சரணங்கள்

1. உதயசூரியன் சோமன்தாரகை
உன்முன்னே மின்மினியே
நிதிநவமணி யென்னும்குப்பைகள்
நிகருமோ உனை இனியே — ஐயனே

2. கனியுந்தேனும் பாலுஞ்சீனியும்
கண்டும்கரும்பும் சிறுமை
இனியஉனது தரிசனத்தின்முன்
இவைகள்யாவும் வெறுமை — ஐயனே

3. செழுமையாகிய வண்ணமலர்கொள்
சிங்காரவனக் காட்சி
அழகின் ஆலயமான உன்முன்
அதற்கெத்தனையோ தாட்சி — ஐயனே

4. அதிசவுந்தர மயில்குயில்கிளி
யாதிபறவைக் கூட்டம்
விதியின் அவைசெயு முன்னழகின்முன்
வெட்கிபஞ்சுபோ லோட்டம் ஐயனே

5. சுத்தஸ்பரிச ரசரூபகந்தந்
தான் அல்லாத பொருளே
எத்தன்மைஉன துருவென்றறிய
இன்பக்காட்சி அருளே ஐயனே

6. பதியில்நீசெய் பலபொருள்களைப்
பார்க்கபார்க்க வடிவே
அதிசயம்தரும் உந்தன்அற்புத
அழகினுக்குண்டோ முடிவே ஐயனே

7. பிறந்தநாள்முதல் தாயைக்காணுப்
பிள்ளைதனை ஒத்தேனே
சிறந்தவேத நாயகாஉன்மேல்
சிந்தையாவும் வைத்தேனே ஐயனே

---

44. இராகம் - மாஞ்சி, ரூபக தாளம்.

பல்லவி

என்னைநீ ஆளுவாய்—ஏகனே—யோகனே என்னை

அநுபல்லவி

பொன்னைமாதைப் பூவை எண்ணம்
பூண்டுநான்கெடாத வண்ணம் என்னை

சரணங்கள்

1. யாதனுசரீரமே—யாதுமில்லை சாரமே
வாதபித்தவிகாரமே—வாதனைகள் அபாரமே
மலநிவாரணு—வடிவபூரணு
நலஉதாரணு—ஞானகாரணு என்னை

2. எந்தநாளும் கிலேசமே என்நெஞ்சிற்—பிரவேசமே
பந்தவினையை நாசமே பண்ணிநீ—செய்வாசமே
பதிதபாவனு—பரமஜீவனு
அதிகசோபனு—அகிலஸ்தாபனு என்னை

3. அன்னை தந்தைநீ அல்லவோ—ஆயிரந்தரஞ் சொல்லவோ
என்னைமாயை கொள்ளவோ—எங்குநான் இனிச்சொல்லவோ
ஏதபேதகா—இனிய சாதகா
வேத நாயகா—விமலதாயகா          என்னை

---

### 45 இராகம் - சைந்தவி, திரிபுடை தாளம்.

பல்லவி

ஏழைக்கிரங்க வொண்ணாதா—இந்த          ஏழை

அநுபல்லவி

ஆழக்கடல் உலகை ஆளும் விநோதா          ஏழை

சரணங்கள்

1. சாடும்பிரசண்டக் காற்றாலே—திசை
தப்பியே அலைபடும் கப்பலைப்போலே
நாடும்பிரபஞ்ச மாலே—என்னை
நைவிக்கவாடினே னான்புவிமேலே          ஏழை

2. நீசெய்வதெல்லாம் சகாயம்—இங்கே
நிரந்தரம் என்செய்கை யாவும் அனியாயம்
ஈசனே நின்பத நேயம்—எனக்
கெள்ளளவுமில்லை ஈதென்ன மாயம்          ஏழை

3. அற்பசுகத்துக் குழைத்தேன்—பாரில்
அனுதினம்ஆயிரம் பொய்சொல்லிப் பிழைத்தேன்
பற்பலதீவினை இழைத்தேன்—துன்பப்
பாரம்பொறாமலே பரிந்துன்னை அழைத்தேன்          ஏழை

4. ஆன்மபத்தினி மணவாளா—அகி
லாண்டபிரமாண்ட அகண்டக்கோளா
வான்மகிழ் தீனதயாளா—தினம்
மகிழ்வேதநாயகன் வணங்கும்பொற்றாளா          ஏழை

---

46. இராகம் - தன்யாசி, ஆதி தாளம்.

பல்லவி

கருணாகரப் பரம்பொருளே அடியனைக்
கண்பார்த் தருள்வாயே — கருணா

அநுபல்லவி

இருணாசஞ்செயும் இரவிசமான
தெருணாடியதே ஜோமயமான — கருணா

சரணங்கள்

1. தோன்றினநாள்முதல் சுகுணமொன்றறியேன்
சொப்பனந்தன்னிலுந் துர்க்குணம்பிரியேன்
ஈன்றவனீயென என்றுமேகுறியேன்
என்னசெய்வாயோவென் றேங்கினேன் சிறியேன் — கருணா

2. தரணியில்நான்ஒரு கருவெனமுளைத்தேன்
தமகுணம்யாவுமே சாகையாக்கிளைத்தேன்
கருமமாகியவிஷக் கனிகளைவிளைத்தேன்
கண்டனைசெய்வையென் றஞ்சியேகளைத்தேன் — கருணா

3. நிகிலலோகங்கட்கெல்லாம் நீயதிகாரி
நிச்சயமாய் என்மனம் நினக்கொருபாரி
அகிலந்தனிலேஅந்த மனம் அகங்காரி
அடக்கி ஆளாவிட்டால் அழியாளோ—நாரி — கருணா

4. அழகுக்காலயமான அமித சுந்தரமே
அன்பருக்கருண்மழை பொழியுங்கந்தரமே
தொழுதிடும் வேதநாயகம் சுதந்தரமே
துணைநீஉனை நம்பினேனிரந்தரமே — கருணா

---

47. இராகம் - மோகனம், ஆதி தாளம்.

பல்லவி

ஏனின்னம் தாமதமையா
என்னிடம் வர — ஏனின்

அநுபல்லவி

தானே உமக்குமுத்தித் தலமொன்றுமில்லையோ
வானமுத்தரைவிட்டு வரமனமில்லையோ — ஏனின்

சரணங்கள்

1. சூரியனைத் தூண்ட அகன்றீரோ—அந்தச்
சோமனுக் கொளிதரச் சென்றீரோ
பாரினைப்புரட்டியே நின்றீரோ—அதில்
பகல் இரவுண்டாக்க முயன்றீரோ

காரிலிருந்து கனமழை சொரிந்தீரோ
கர்ப்பத்தில் சிசுக்களையே புரிந்தீரோ
சாரும்பல்லுயிர்க் குயிராய் விரிந்தீரோ
சர்வலோககாரியஞ் செய்துதிரிந்தீரோ ஏனின்

2 அண்டகோடிகளைத் தூக்கினீரோ—நவம்
ஆகச்சிலஅண்டம் ஆக்கினீரோ
கண்டகர்உலகை நீக்கினீரோ—கடல்
கரையைக்கடவாமல் தேக்கினீரோ

அண்டும்பல்லுயிர்க்கமு தூட்டுகின்றீரோ
ஐம்பூதங்கட்கும்வேலை காட்டுகின்றீரோ
மண்டுங்கனிக்குச்சுவை கூட்டுகின்றீரோ
மலருக்குப்பலவண்ணந் தீட்டுகின்றீரோ ஏனின்

3. மரஞ்செடிபயிர்கள் நிறைத்தீரோ—அவை
வளரவேதண்ணீரை இறைத்தீரோ
சுரர்கள்இசைகேட்டுக் களித்தீரோ—நல்ல
தொண்டர்இதயத்தில் ஒளித்தீரோ

பரமகிருபாகர பரஹிதநேசரே
பரமதகண்டன பாபவிநாசரே
சருவவிநோத சராசரவாசரே
தாசன்வேதநாயகன் தன்பிராணேசரே ஏனின்

---

48. இராகம் - மத்தியமாவதி, ரூபக தாளம்.

பல்லவி

இவ்வளவு தான்ஐயனே—அதிகம் அல்ல
இரங்கிரீ யருள்மெய்யனே இவ்வளவு

அநுபல்லவி

அவனியில்வளரும் மூவாசையைப்பரிகரி
எவ்வளவுமேதுன்பம் இல்லாமல்ஆதரி

இதயமலர் தரி—விதனமதுபிரி
நிதமும் அருள்புரி இதவேசரிசரி இவ்வளவு

சரணங்கள்

1. எனைஎந்தநாளும்நீ நீங்காதே—நான்போம்
இடமெங்கும் கூடவாயின் வாங்காதே
வினையனென்றென் மேற்கோபம் வீங்காதே—மன
வேதைசுமக்கஎன்னால் தாங்காதே
நினைவிலும் தீதைநான் நினையாமற் பார்த்திரு
நித்திரைசெய்யும்போதென் பக்கத்தில் காத்திரு
நெடியநிலைபெற—கொடிய பிழைபொற
அடியன்மனமுற கடியதுயர் அற இவ்வளவு

2. மாயையில்மனம்புக ஒட்டாதே—என்னை
வஞ்சனைக்காளென்று சுட்டாதே
ஆயிரம்தண்டம் என்சொல்தட்டாதே—உன்
தனுக்கிரகமின்றி நலங்கிட்டாதே
நாயேன் விரும்பிய நல்லவரங்கள்கொடு
நரகை அடைத்துமோக்ஷ நாட்டைத்திறந்துவிடு
நனவுகொடுகொடு—தினமும்விடுவிடு
தினமும்மகிழ்வொடு—கனசுகுணம்இடு இவ்வளவு

3. நலமின்றிக்குறையை ஆராயாதே—பெரு
நன்மைகள்கொடுப்பதில் ஓயாதே
பலவேலைஇட்டேனென்று காயாதே—அற்பப்
பாக்கியம்நான்கேட்கினும் ஈயாதே
புலனில்வேதநாயகன் புகழும்சுகுணசீலா
பூதபவிஷியவர்த்த மானமெனுந்திரிகாலா
போதமழைபொழி—மாதர்மயலழி
பாதகமதொழி—எதமறவிழி இவ்வளவு

---

49. இராகம் - சாரங்கா, அடதாளம் சாப்பு.

பல்லவி

ஆதரித்திட நல்ல தருணம்—எனை
யாதரித்திட நல்ல தருணம்—என

ஐயா உனக் கனந்தஞ் சரணம் ஆதரி

அநுபல்லவி

பாதகநாசனு—பரமகிருபாசனு
சாதகமோசனு— தர்மப்பிரயோஜனு ஆதரி

சரணங்கள்

1. என்பழிமறைப்பதில் யானேயதப்பாதாளம்
இதரர்பழி தூற்றலில் என்வாய்பெரியமேளம்
அன்பின்மனப்போராசை அப்புவியினும்நீளம்
அண்டம் வசமானாலும் அடங்காப்பெரும்வேதாளம்

ஆட்டி மயல்வலை—பூட்டி அநுதினம்
கோட்டிசெயும்வினை—ஓட்டி அடியனை ஆதரி

2. ஓடிஅலையநெஞ்சுக் குலகமும்வானும்அற்பம்
உன்னிடம்வரவென்றால் ஒழியாதஅசந்தர்ப்பம்
தேடிநற்கருமங்கள் செய்வதுங்கஜகர்ப்பம்
தீவினைசெய்வதேஎன் சிந்தனையின்சங்கற்பம்

திருத்தமுடனே என்—கருத்துநலமிசைப்
பொருத்தமுறச்செய்து—வருத்தந்தொலைத்தெனை ஆதரி

3. என்குறைகாணவென்றால் என்னிருகண்ணும்ஊனம்
இதரர்பிழைகாணக்கண் இரவிகோடிசமானம்
வன்கண்மொழிகளுக்கென் வாயேமுக்கியஸ்தானம்
மதுரச்சொல்பேசவென்றால் மாறாததீர்க்கமோனம்

வாதமொடுபல—பூதகாரணை
வேதநாயக—நீதனேயெனை ஆதரி

---

50. இராகம் - நாதநாமக்கிரியை, திரிபுடை தாளம்.

பல்லவி

உன்னைநம்பினேன் ஐயனே—எனையாதரி உன்னை

அநுபல்லவி

உன்னைநம்பியஏழை—தன்னைமுகம்பாராமல்
அன்னைபிதாவே நீ கைவிடலாமா
நான் கெடலாமா
துன்பப் படலாமா உன்னை

சரணங்கள்

1. தனமுமின்னார்கள்புவனமும்உலகவாழ்வின்
கனமும்வேண்டிலன் இது தோராயோ
தினமும் உனைக்கருது மனமும்உனதாதரி
சனமும்வேண்டினேன் அருள் கூறாயோ

மருள் தீராயோ
பொருள் தாராயோ — உன்னை

2. படிமீதினில்என்ன முடிபா உதவிகள்
அடியேனுறச்செய்த பெரியானே
கொடியேன்உனை அவை நொடியாகிலுந்தொழும்
படியேஅருள்நலம் பிரியானே

தூயர்க் குரியானே
தீயர்க் கரியானே — உன்னை

3. அயமேபெருங்கல்லின் மயமேயெனும்இரு
தயமேமெழுகென உருகாதோ
ஸ்வயமேபராமாதி சயமேவேதநாயகன்
நயமேவினைசெய்வம் பருகாதோ

அன்பு கருகாதோ
இன்பு பெருகாதோ — உன்னை

---

51. இராகம் - பந்துவராளி, ரூபக தாளம்.

பல்லவி

கடைக்கண்ணால் எனைப்பாராய்—உன
தடைக்கலம் வினைதீராய் — கடைக்

அநுபல்லவி

கிடைக்கொண்ணாப் பதந்தாராய்—நலம்
படைக்கவேஅருள் கூராய்—அருட்
கொடைக்குநானென்னவே யவதரித்த
கோலாகல-மூலஅநு-கூலா குண-சீலா-நிதம் — கடைக்

சரணங்கள்

1. வஞ்சகமாயையில் ஆழ்ந்தேன்—ஒரு
தஞ்சமென் றுன்னடி தாழ்ந்தேன்
அஞ்சலென்றெனை ஆதரித்தாளுவாய்
ஐயாமிகு-பொய்யால்மனம் நையாதருள்-மெய்யா-ஒரு கடைக்

2. ஐயனேதீரா யென்பாபம்—அருள்
செய்யஉனக்கென்ன லோபம்
வையகமாதி வளர் அண்டம் யாவினும்
வாசாபுவ-நேசா மற-நாசா பிர-காசா-ஒரு — கடைக்

3. அஞ்சலிலனில்உன் வாய்நோமோ—ஏழை
நெஞ்சம்வருந் திடலாமோ
பஞ்சமோகைப்பொருள் கொஞ்சமோ பூபரி
பாலா அநு—கூலா ஒரு—மேலா முதல்—நூலா—ஒரு கடைக்

4. இத்தரைமீதினில் நீயே—நல்ல
பத்தரைக்காக்க வந்தாயே
சித்தமுவந்தெனை நித்தமும் ஆளொளிர்
நேகா கன—யோகா அதி—தியாகா தனி—ஏகா—சூளிர கடைக்

5. பூதலம்போற்றும் பொற்பாதா—அரு
மாதவஞானப் பிரசாதா
வேதநாயகன் பாடுந்தமிழ்க்கருள்
வேதா உயர்—நீதா கன—தாதா நய—போதா—உன் கடைக்

---

52. இராகம் - அசாவேரி, திரிபுடை தாளம்.

பல்லவி

பாசத்தால்மனம் வாடினேன்—உந்தன்
வாசத்தாள்மலர் கூடினேன் பாசத்

அநுபல்லவி

நேசத்தோர்கள்கை வல்லியமே—உயர்
நிர்மலாகித்த அல்லியமே—கன
மாசற்றோங்கும் பிரபல்லியமே—ஜெகம்
மகிழும்பக்தவாற் சல்லியமே—மல பாசத்

சரணங்கள்

1. நினைவிலேன் பிழையாவுமெண்ண
நினைக்குந்தானென்ன சாத்தியமா
எனைவருத்தும் இந்திரியப்பேய்தனக்
கித்தனை ஆகாத்தியமா
வினைஎனக்கு விரோதியா—என்றும்
விலகிடாக்கர்ம வியாதியா—கொடு
மனமுமே பிரதிவாதியா—கெட்ட
மாயைஎன்ன தயாதியா—ஐயா பாசத்

2. இருதலைக்கொள்ளி எறும்புபோலெனக்
கிடைவிடாமன வாட்டமே
மருவும்பந்தப்பசாசு தன்னொடு
மாறிடாத போராட்டமே
கருமமாயா விகாரமே—செய்யும்
கலகஜாலம் விஸ்தாரமே—நல்ல
தருமம்எனக்குத் தூரமே—பின்னும்
தப்புகள்கப்பற் பாரமே—ஐயா பாசத்

3. வளர்கல்லியாணத்தில் தாலிபூட்டிட
மறக்குமூடர்கள் போலவே
தளர்பிரபஞ்சவியாபாரத்தால்உன்தன்
தாள்மறந்தனன் சாலவே
உளவியாதிக்காரோக்கியமே—நிதம்
உன்னுவோர்கள் மனோக்கியமே—நலம்
விளையுமாமறை வாக்கியமே—தொழும்
வேதநாயகன் பாக்கியமே—பந்த பாசத்

---

## 53. இராகம் - கன்னடகௌளம், ஆதி தாளம்.

பல்லவி

ஆதிபரமநாதா—ஞான—ஜோதிதா—ஒண்ணுதா ஆதி

அநுபல்லவி

பூதலப்பரவும் விநோதனே கனஅ
நீதமாயஇருள் பேதமாகவே ஆதி

சரணங்கள்

1. காமக்குரோதமதம் லோபம்—அகங்
காரம்பொய்மாற்சரியங் கோபம்—இன்னும்
பூமியிற்பலபலபாபம்—செய்யும்
புல்லன்மனம் அவித்தியாரூபம்—நல்ல ஆதி

2. பெண்டுபிள்ளைகள் சமுசாரம்—முதற்
பேசும்லௌகிக வியாபாரம்—தன்னில்
மாண்டுமேமோகாந்த காரம்—துயர்
மாற்றியருள்வை நிர்விகாரம்—நல்ல ஆதி

3 பாவக்கடல்கடக்குங் கலமே—தொண்டப்
பயிர்கள்வருந்தெய்வ நிலமே—கன
நாவலர்போற்றிடும் நிர்மலமே—வேத
நாயகநானுன் அடைக்கலமே—நல்ல ஆதி

---

54. இராகம் - கரகரப்பிரியை, ரூபக தாளம்.

பல்லவி

இந்தவரந்தருவாய்—எனக்
கெந்தவரங்களு மில்லையென்றாலும் இந்த

அநுபல்லவி

சுந்தரமாகத் துலங்குந்தெய்வீகனே
சந்ததமும்புவி தாங்கும்நிர்வாகனே இந்த

சரணங்கள்

1. காயநிமித்தங் கலங்கிநையாமல்
கண்டவர்க்கெல்லாம்நான் தொண்டுசெய்யாமல்
மாயப்பிரபஞ்சத்தில் மாட்டிவையாமல்
மாதர்கண்ணம்பென் மனத்தில்தையாமல் இந்த

2. எங்கெங்குமேஉன் னுருவமாய்மின்ன
எண்ணம்வேறின்றி உனைமனமுன்ன
மங்களநாமமென் வாய்நிதம்பன்ன
வார்த்தைகள்யாவுமுன் வார்த்தையாய்மன்ன இந்த

3. சுத்தசைதன்னிய நிலைமையில்சார
தோஷகர்மானுபந் தங்களுந்தீர
அத்தனேநித்த முனக்கன்புகூர
ஆனந்தவீட்டிலே நான்வந்துசேர இந்த

4. சூதுபொறாமைபொய் கோபமில்லாமல்
சோரமுலோபந்துன் மார்க்கங்கல்லாமல்
வேதநெறியை விலக்கிநில்லாமல்
வேதநாயகா விளம்பஞ்சொல்லாமல் இந்த

---

## 55. இராகம் - கமாஸ், ரூபக தாளம்.

பல்லவி

ஏகபராபரனே—கருணைப்பிர
வாகமனோகரனே ஏக

அநுபல்லவி

தேகமுதும்பல—மோகஉபாதிகள்—ஏகவெனக்கு
விவேகமருந்தருள் ஏக

சரணங்கள்

1. சஞ்சலமானேனே—மனங்கொந்து
தளர்ந்துபோனேனே
அஞ்சலெனத்தானே—அடியனை
ஆண்டருள்வாய்கோனே
பஞ்சபூதாதிபிர—பஞ்சமெலாஞ்செய்து
தஞ்சம்செயும்நிஷ்பிர—பஞ்சப்பொருளான ஏக

2. சங்கடமாற்றாயோ—எளியேன்
தன்முனந் தோற்றாயோ
இங்கிதஞ்சாற்றாயோ—தமியனை
யேகனை யேற்றாயோ
அங்குமிங்கும்புவி—எங்கும்உயிரொனத்
தங்கும்படி அருள்—பொங்குங்குணாகர ஏக

3. நேயர்சகாயனே—அருமறை
நீதிசொல்வாயனே
தூயநிகாயனே—அமரர்கள்
சூழ்சமுதாயனே
மாயவிஷயாதி—நோயணுகாமலே
தாயெனவேவேத நாயகனை ஆளும் ஏக

---

## 56. இராகம் - எதுகுலகாம்போதி, ஆதி தாளம்.

பல்லவி

கருணாகடாக்ஷஞ் செய்வாயே—ஸ்வாமி கருணா

அநுபல்லவி

மருணசமாகவே மகிழ்வாகநீயே கருணா

சரணங்கள்

1. அநியாயம் உலகனிர்த்தாந்தம்—இதில்
அழியாதவண்ணம்நீ அருள்வை உபசாந்தம்
தனிஉன்றனோடு மேகாந்தம்—கொள்ள
சர்வதாகாலமு மெனதுசித்தாந்தம் கருணை

2. நாமரூபகமாம் பிரபஞ்சம்—ஆன்ம
நன்மையை அழிக்கும் என்றுணரும் இதநஞ்சம்
காமினியாதிகளில் கெஞ்சம்—நாளும்
கலங்கினேனின்பாத கமலமேதஞ்சம் கருணை

3 போதாந்தநிலைமை யுறுதேவ—நல்ல
புவனகோடிகள்செய் தனிக்கின்றகோவே
வேதாந்தரசபொழுகுகாவே—நிதம்
வேதநாயகன இதயவண்டுவளர்பூவே கருணை

---

## 57. இராகம் - காம்போதி, ஆதி தாளம்.

பல்லவி

ஆதிபரமநாதா—நல்ல
அற்புதகற்பதம்பெறப் பொற்பதம் எனக்கருள்செய் ஆதி

அநுபல்லவி

ஓதரும்உயிர்க்குயி ராகிஎங்குநிறையும்
பூதசராசரப் பொருள்கள் எல்லாம்உறையும் ஆதி

சரணங்கள்

1. ஜீவன்பிழைக்கும்வழி அறியேனே—நான்
தெற்குவடக்கறியாச் சிறியேனே
பாவலகரிகொண்ட வெறியனே—பந்த
பாசக்களையை வெட்டி எறியேனே
ஆவலுடனேஎங்கும் அலைந்தகம்வெம்பினேன்
வேதநாயகனே உன்திருவடிநம்பினேன் ஆதி

2. ஐயனே எனக்கருள் ஊட்டாயோ—கெட்ட
அகங்காரமெனும்பேயை ஓட்டாயோ
உய்யவழிஎனக்குக் காட்டாயோ—என்தன்
உள்ளத்தில்உன்பதத்தை நாட்டாயோ
பொய்யுலகநடையைப் பொருளெனநாடினேன்
மெய்யறிவில்லாமலே மிகமிகவாடினேன் ஆதி

3. அண்டங்கள்படைத்தளித் தழிப்போனே—கணம்
ஆகப்பல்கோடிகாலங் கழிப்போனே
தொண்டர்மனத்துயரம் ஒழிப்போனே—நல்ல
சுகமுத்தரொடுகூடிச் செழிப்போனே
அண்டும்வேதநாயகன் அகத்தொளிர்ஜோதியே
மண்டும்வினைகளெல்லா மாற்றுதல்நீதியே ஆதி

---

58. இராகம் - பரசு, அடதாளசாப்பு.

பல்லவி

ஜெகநாதா—வினை—அகலாதா ஜெக

அநுபல்லவி

பகலோனெனஅரும் பவ இருள்நீக்கும் ஜெக

சரணங்கள்

1. பரிதாபம்பரிதாபம் ஐயா என்னிலைமை
பஞ்சப்புலாதியர்க் கார்தந்தார் தலைமை
தரைமிசைஎன்செய்கை யாவுமேபுலைமை
தந்தருளினிஞான சாஸ்திரப்புலமை ஜெக

2. அநுகூலசத்துரு வாகுமென் னுள்ளம்
அநுதினஞ்செய்வதெல்லாம் பெருங்கள்ளம்
தினமுமேபடிந்திடுந் தீவினைப்பள்ளம்
தீர்த்தெனையாட்டுவை திருவருள்வெள்ளம் ஜெக

3. ஈசனே அறநெறி எனக்கென்றும் விலக்கம்
என்பிழைகளை எண்ண இல்லையே இலக்கம்
கூசியேநான்மிகக் கொண்டேன் கலக்கம்
குணவேதநாயகா கொடுத்தருள் துலக்கம் ஜெக

---

59. இராகம் - மத்தியமாவதி, திரிபுடை தாளம்.

பல்லவி

இரக்கஞ்செய்வாயே—ஐயா என்மேல் இரக்

அநுபல்லவி

இரக்கஞ்செய்வாயே—புரக்கும்எந்தாயே
ஏகமாகிய—யோகபூரண—பாகமேபெற—மோகமேஅற இரக்

சரணங்கள்

1. தேகநிமித்தம்—செய்வதநர்த்தம்
ஏகப்பிரசித்தம்—எங்கினேன் சித்தம்
இன்பமேவிய—நின்பதாம்புய
அன்புதங்கிட—துன்பமங்கிட இரக்

2. நாரொருவுடன்—நாயினுங்கேடன்
ஈனர்கள்சீடன்—என்றும்பொய்வேடன்
ஈனமும் அவ—மானமுங்கெட
ஞானமும் கன—மோனமுந்தொட இரக்

3. உலகவியாபாரம்—ஓயாவிசாரம்
கலகம்அபாரம்—கர்மவிகாரம்
கஷ்டமும் கன—நஷ்டமும்பெற
துஷ்டனானன—கிஷ்டனாகவே இரக்

4. தாசர்கள்நேசா—தர்மவிலாசா
பாசவிநாசா—பாக்கியப்பிரதேசா
பாதமேதொழும்—வேதநாயகன்
மீதருள்மற—வாதநாதனே இரக்

---

60. இராகம் - சங்கராபரணம், ரூபக தாளம்.

பல்லவி

பரனே—பக்தர்சுதந்—தரனே—நாளும்
பக்ஷம்வைத்தென்னை சம்—ரக்ஷணைசெய்தருள் பர

அநுபல்லவி

இரவிகோடியென ஒளிவீசிடும்
யேகஅனேக வைபோகநிர்தேக தற் - பர

சரணங்கள்

1. உன்னையல்லாற்கதி—பின்னையில்லையென்
றனக்குத்தெரியாதா—நாளும்
உற்றதன்பிள்ளையைப்—பெற்றதாய்தள்ளின்
உலகஞ்சிரியாதா—மேகம்
தன்னைப்பயிர்வேண்டு—முன்னே அருமழை
தானேசொரியாதா—அந்தத்
தன்மைபோல்நீஉயர் நன்மையுதவிலென்
தாபம் மறியாதா

இக்கிலமீதினி லென்னைப்போலோர்ஜடன்
இல்லையேபைங்கிளிச் சொல்லையுற்றருகுடன்
மன்னிமோகக்கடல் தன்னில்விழும்மிடன்
மாளுமுன்னுளும் வந்தாளுவதுன் கடன் பரா

2. நீவிபஅண்டங்கள்—மேவிஆகாயத்தில்
நிற்கச்செய்தாய்நீயே—எந்தன்
நெஞ்சம்உன்தாளினைக்—கஞ்சம்பதிந்திட
நீவரம்ஈவாயே—உனக்
கோவியமோ இது—காவியங்கொள்ளரும்
உத்தமஎந்தாயே—எனக்
குன்னைத்தருபட்டும்—இன்னை—அலட்டா
தொழியுமோ என்வாயே
தீவினைநாச னெனப்புகழ்மாலையே
சேர்ந்தஉனக்கென்ன சாந்தர்கண் வேலையே
பாவியென்பாலுண்டு வேலைபல்காலையே
பட்டேன்பொய்விட்டேன் கும்பிட்டேன்உன்காலையே பரா

3. தீதகலும்பஞ்ச பூதம்வளர்சர்வ
சாதகபூமியே—வினை
தீர்ந்திடவேஞானக் காந்திசொரியுஞ்
சர்வாந்தரியாமியே—என்றும்
வேதநாயகன்மீ தருள்மறவாத
ஸ்வாமியே—உண்மை
விளங்கவேபல வளங்கள்சாரும்நிஷ்
களங்க நேமியே
போதனேநீக்காயென் பாதகவெட்டையே
பொய்யுருவாகிய மெய்யெனுங்கட்டையே
நாதனேநீங்குமுன் சாதகநிஷ்டையே
நண்ணிடப்பண்ணுவாய் புண்ணியப்பிரதிஷ்டையே பரா

---

## 61. இராகம் - எதுகுலகாம்போதி, ஆதி தாளம்.

பல்லவி

இன்னமும்பராமுகம் ஏதோ—எந்தன்
முன்னம்வந்தாள ஒண்ணாதோ இன்னம்

அநுபல்லவி

தன்னவரைரக்ஷிக்கத் தானேகங்கணமே
தரித்தவனேஎனை ஆதரித்தல்வங்கணமே இன்னம்

சரணங்கள்

1. தினமும்உன்பணி விடையே—நான்மறவாமல்
செயஅருள் நன்னடையே
இனமாகும் அருட்கொடையே—வழங்கிட
எனின்ன முந்தடையே
கனமுமேலவர்—இனமும்நிர்மல
பனமும்உன்தரி—சனமுமேயருள் வேத

2. பொய்வளர் மெய்க்கும்பமே உடையுமுன்
போதிபுண்ணி யாரம்பமே
தெய்வநி ராலம்பமே—என்கவிகளைச்
செவிகொண்டு சிரக்கம்பமே
செய்குவாயுளம்—வைகுவாயருள்
பெய்குவாய்வினை—எய்குவாயுயர் வேத

3. தயைசெய்யிற் பொல்லாங்கா—எந்தனையாளத்
தாமசஞ்செயல் பாங்கா
பயன்உதவிடில்நீங்கா—வேதநாயகன்
பாவுந்துண தராங்கா
நயமும்ஆணவ—ஜெயமும்நாளும்அ
பயமும்பாதபங்—கயமுமேயருள் வேத

---

63. இராகம் - ஆகிரி, ரூபக தாளம்.

பல்லவி

நாதனே தயைபுரிவாய்—எனக்குமெய்ப்
போதமா மழை சொரிவாய் நாதா

அநுபல்லவி

நீதகல்பரம்பர—திவ்யகுணடம்பர
ஓதருஞ்சுயம்பர—உலகமுடன் அம்பர நாத

சரணங்கள்

1. நண்ணிநல்வினைகளைப்—பண்ணியறிகிலாத
நான்நரன் போலியா—இந்த
மண்ணின்மிசை எனக்கும்—புண்ணியமென்பதற்கும்
மத்தியில்வேலியா—எந்தன்
எண்ணமெல்லாங் கறுப்பே
எனக்குன் னடிவெறுப்பே

பண்ணாதே மேறுப்பே
பரிந்தாள்வ துன்பொறுப்பே நாத

2. என்பாட்டில் இரங்காமல்—உன்பாட்டில்நீசும்மா
இருந்திடில்அது தகுமா—என்றும்
தன்பாட்டில்மகிழ்ந்தோனே இன்பூட்டுங்கதியுந்தன்
தயையின்றிக் கைபுகுமா—எந்தன்
அன்பெல்லாம் வெறும்பேச்சே
அறமென்பதுமேற் பூச்சே
துன்பப்பிரளயம் நீச்சே
தொல்புவியெங்கும் ஏச்சே நாத

3. தினையளவும்நன்னெறி—தனையறியாதநான்
தீவினைக்கே யிலக்கா—பாரில்
நினையன்றிமற்றெவையும்—நினையும்என்னெஞ்சுக்கு
நீமாத்திரம்விலக்கா—நன்மை
புலையும்நீதிப் பிரமாண
புவனகோடி நிர்மாண
விஜயநித்திய கல்யாண
வேதநாயகன் பிராண நாத

---

64. இராகம் - பியாகு, ஆதி தாளம்.

பல்லவி

தஞ்சம்நீயே—தயைபுரிவாயே—தஞ்சம்

அநுபல்லவி

அஞ்சலென்றேதினம்—ஆளும்எந்தாயே தஞ்சம்

சரணங்கள்

1. தினமனவேதை—சேர்ந்தநான்பேதை
உனதடிப்போதை—உறஅருள்பாதை தஞ்சம்

2. பாதகபஞ்சனு—பண்டிதரஞ்சனு
போதககஞ்சனு—புண்ணியநிரஞ்சனு தஞ்சம்

3. தருமசிங்காரா—சருவசங்காரா
வரும்வேதநாயகன்—மனஅலங்காரா தஞ்சம்

---

65. இராகம் - பரசு, ஆதி தாளம்.

பல்லவி

நீயேகதிஎனக்குன்—அருள்கூரே—தந்தை
தாயேநினைஅல்லது துணையாரே — நீயே

அநுபல்லவி

தூயகருணைமழை சொரிகாரே
சொலஅரு—நலமுறு—தவமிசை—நிலவென
மலஇருள்—செலஅருள்—அலரும்உதாரா — நீயே

சரணங்கள்

1. முத்தியென்பதெவர்க்குஞ் சமுதாயங்—அது
முத்தர்மட்டுக்கும்என்ப தென்னஞாயம்
நித்தியனேவிடுவேனோ என்தாயம்—நீ
நீதியின்படிசெய்குவாய் விதாயம்
சத்தியனேஏதோ உன்அபிப்பிராயம்
தகவென—தகமிசை—மிகமதி—புகஅரும்
இகபர—சுகமருள்—அகல்ஜகநாதா — நீயே

2. வாழமனைதந்திடில் வேண்டாமே—என்று
மாநிலத்துண்டோ மறுப்பவர்தாமே
ஆழவேநீயெனது மனப்பூமேல்—குடி
ஆகிடின் உனக்கென்ன குறைவாமே
சூழநீ குடியுறில் வினைபோமே
துதிபுரி—விதியினர்—கதியெனும்—நிதிபெற
அதிதயை—பதிவுறும்—அதிசயயோகா — நீயே

3. சாதகனேஎன்துயர் தெரியாயோ—நல்ல
சர்வாந்தர்யாமியெனும் பெரியாயோ
பாதகம்அறஅருள் புரியாயோ—பரி
பக்குவஞானமழை சொரியாயோ
வேதநாயகன்மனங் கரியாயோ
மிடலுறு—சுடரவன்—உடுபதி—தடவரை
கடலிட—முடன்இடர்—கெடஅடர்—தேவா — நீயே

66. இராகம் - பூபாளம், ரூபக தாளம்.

பல்லவி

தேவாதி தேவே—திருவருள்
செய்தென்னை நீ காவே — தேவாதி

அநுபல்லவி

ஜீவசம்ரக்ஷணை செய்யும் கிருபாநிதே
தினந்துஷ்டர்கள்—இனஞ்சுட்டவர்
முனஞ்சிஷ்டர்கள்—மனம்தொட்டமர் — தேவாதி

சரணங்கள்

1. பாழுமனமேசுத்த பாஷாணம்—பெரும்
பாபமென்றால் அதற்குக்கலியாணம்
வாழும்இந்நாளொழிந்து நிரியாணம்—கிட்டி
வருமுன்னம் அருள்புண்ணியப் பிரமாணம்
ஏழையென்செய்கையுன்னில் எனக்குமேவரும் நாணம்
இழைக்குஞ்சுகம்—அழைக்குந்தகை
தழைக்கும்படி—பிழைக்கும்படி — தேவாதி

2. அருள்செய்யின் அலதுன்னைவிடுவேனோ—உனை
அன்றிமற்றோரைக் கும்பிடுவேனோ
மருவுமாயிற்சிக்கிக் கெடுவேனோ உன்பால்
வழக்கிட்டிரக்கப் பயப்படுவேனோ
மருள்செய்யும்பொருளைநீ—வழங்கினுந்தொடுவேனோ
மணந்தந்திடும்—அனந்தந்துயர்
முனஞ்சிந்திடு கனந்தங்கிட — தேவாதி

3. சிஷ்டபாலகங்கண தாரணனே—பெரும்
தீயபசாசகண மாரணனே
துஷ்டகண்டன மந்திரோச்சாரணனே—நாளுஞ்
சுயம்பிரகாச நிஷ்காரணனே
இஷ்டன்வேதநாயகன்—ஏதநிவாரணனே
இணங்கண்டர்கள் கணங்கண்டடி
வணங்கும்படி—குணங்கொண்டுயர் — தேவாதி

---

67. இராகம் - நீலாம்புரி, ஆதி தாளம்.

பல்லவி

ஏகாதிபனே—அருள்புரி—யோகாதிகரனே ஏகாதி

அநுபல்லவி

ஆகாமியமுறும்—மாகாமியம்அறும்
அகணிதசிற்பர—அதிகுணதற்பர
இகபரநற்கத—இணையறும்அற்புத ஏகாதி

சரணங்கள்

1. பழிக்குநான்குருபீடம்—பக்தனைப்போல்நான்
பரிப்பது வெளிவேடம்
அழிக்கும்பொய்வாய்ப்பாடம்—கொடுமாயைக்கென்
அகமேநடனகூடம்
செழிக்கும்வரங்கள் ஈவாய்
சிந்தையிற் குடியாவாய்
தினகரசுந்தர—திருவளர்மந்தர
அனகநிரந்தர—அகிலதுரந்தர ஏகாதி

2. படியாக்கொடு நெஞ்சமா—ஐயனே அது
படருந்துர்க்குண புஞ்சமா
அடியேன் துயர்க்கொஞ்சமா—வரப்பிரசாதம்
அருள உனக்குப் பஞ்சமா
படியெல்லாம் ஈன்றதாயே
பாரில்நற்கதி நீயே
பரமபவித்திர—பதிதஉபத்திர
தருமசமுத்திர சகலவிசித்திர ஏகாதி

3. சுரசேவிதபாதா—மலரகித
சுஜநவற்சலதாதா
வரதாயகநாதா—வேதநாயகன்
மனவாலய கியாதா
நரபரிபாலன—நயகுணலாலன
நாகரிகத்துவ—நாமமகத்துவ
போகபிரபுத்துவ—புண்ணியதத்துவ ஏகாதி

68. இராகம் - தன்யாசி, ரூபக தாளம்.

பல்லவி

நிச்சயம்இதுதானே—பதி—நீயருள்கோனே நிச்சயம்

அநுபல்லவி

நச்சுமரம்போல்—நாளும்வளர்ந்தேன்
இச்சகந்தனில்—இதயந்தளர்ந்தேன் நிச்சயம்

சரணங்கள்

1. அல்லும்பகலும் பொருளில்ஏக்கம்
அநித்தியசுகங்களே என்னோக்கம்
நல்லவர்சபை எனக்குநீக்கம்
ஞானவழியில் நாளுந்தூக்கம் நிச்சயம்

2. துஷ்டர்களுடனே அன்யோன்யம்
துர்க்குணமெல்லாம் சர்வமான்யம்
இஷ்டம்வைப்பதுவே தனதான்யம்
ஈசனேஎனக் கறிவுசூன்யம் நிச்சயம்

3. நீதுறும்எனக் குனதுவேதம்
செவிடன்காதில் சங்கநாதம்
வேதநாயகனே உன்பாதம்
விரும்பிவாழ்த்தலே பிரமாதம் நிச்சயம்

---

69. இராகம் - அடாணு, ஆதி தாளம்.

பல்லவி

கருணுசாகரா—கனஉபகாரா
காத்தருள்வாய்—கோவே கருணு

அநுபல்லவி

அருணோதயமென அடியார்க்குக்காட்டும்
ஆத்மகோடிகள் உஜ்ஜீவநஅமுதூட்டும் கருணு

சரணங்கள்

1. நிச்சயஞானமே நினதுஸ்வாதீனம்
நீதராவிடில் எனக்கேதுமெய்ஞ்ஞானம்
அச்சமில்லாமலே அபயப்பிரதானம்
அருள்செயின் அடியனுக்கில்லைசமானம் கருணு

2. சிஷ்டன்போல்யாவர்க்குந் திவ்வியப் பிரசங்கம்
செய்வதிலேஎனைப்போ லெவர்சிங்கம்
சட்டமாய்நடப்பதே சர்வவில்லங்கம்
சாமிநீ அறியாயோ தமியன் அந்தரங்கம் கருணை

3. எத்தனையோசெய்தேன் உனக்கபராதம்
இதுநிமித்தம்உனக் கென்மேல்விரோதம்
அத்தனேபிழைபொருத் தாள்வதேநீதம்
அருள்புரியஇனி வேண்டாம்விகாதம் கருணை

4. தலைவன் இல்லாவிடில் தழைக்குமோராஜ்யம்
தரையிலேநீயல்லால் சகலமும்பூஜ்யம்
விலகிடாதருள்உயர் விமலசாம்பிராஜ்யம்
வேதநாயகா இன்னந் தான்என்னவியாஜ்யம் கருணை

---

## 70. இராகம் - தோடி, ஏக தாளம்.

பல்லவி

தயைபுரிய இன்னந்தாமசமேது தயை

அநுபல்லவி

பயநிவாரணா—பாக்கியபூரணா
உயரும்ஆரணா—உலககாரணா தயை

சரணங்கள்

1. அத்தனே ஒருசாணுகியகுக்ஷிக்
காகநான்ஊரெல்லாம் அலைந்திடும்பக்ஷி
நித்தமும்பேசுவேன் ஆயிரங்கக்ஷி
நீதிநெறியில்லா நிரக்ஷராகுக்ஷி தயை

2. தத்துவஞானத்தைத் தள்ளியேபோட்டேன்
சாமிநான் இந்திரிய வாசலைப்பூட்டேன்
உத்தமம்எனக்கருள் பலதரங்கேட்டேன்
உதவிசெய்யாவிடில் உனைவிடமாட்டேன் தயை

3. சர்வவிநோத விசித்திரநிர்மாணா
சாசுவதமங்கள சுத்தகல்யாணா
பரமநித்தியானந்த பாக்கியஉக்கிராணா
பாலவேத நாயகபிரமாணா தயை

---

71. இராகம் - முகாரி, ரூபக தாளம்.

பல்லவி

காத்தருள்வாய்—எனைக்—காத்தருள்வாய்

அநுபல்லவி

சாஸ்திரம்வேதம் ஸ்தோத்திரமேசெய்யப்
பாத்திரனேதயை—நேத்திரனேதினம் காத்தருள்

சரணங்கள்

1. ஆனாலும்என்பாபம் அநியாயம்அநியாயம்
ஞானியைப்போல்நான்காட்டும் நடையேமுழுமாயம்
ஈனமுறுந்தமகுணங்கள் என்தனக்கேகந்தாயம்
தீனனென்மேல்நீகோபஞ் செய்யிலென்ன ஆதாயம் காத்தருள்

2. மாதர்நீஉன்மகனுன் மன்னவனீகுடிநானே
தாதாநீயாசகனுன் சுவாமிநீ அடியேனே
சாதகஞ்செய்சற்குருநீ தமியேன்சிஷன்தானே
ஆதாரமாகவுனை அடுத்துவந்தேன்சுரர்கோனே காத்தருள்

3. வாக்குமனம்எட்டாத வாசாமகோசரனே
பாக்கியபலதான பரிபாலபரமேசுரனே
தேக்குமலவிருள்நாசஞ் செயும்உதயபாஸ்கரனே
ஆக்கும்வேதநாயக னுக்கிரகதயாபரனே காத்தருள்

---

72. இராகம் - தோடி, ரூபக தாளம்.

பல்லவி

வாவா ஜகநாதா—வாவா சுகதாதா வாவா

அநுபல்லவி

பாவங்களை நிர்மூலமாக்கப்
பரமார்த்தங்கள் கொடுத்துக்காக்க வாவா

சரணங்கள்

1. தர்மாதர்மந்தெரியேன்—ஜெப
தபசாதிகள் புரியேன்
கர்மம்அனுசரியேன்—உனைக்
கண்டால் இனிப்பிரியேன் வாவா

2. எனை நீவிடலாமா—பல
இடர்நான்படலாமா
வினையேதொடலாமா—ஏழை
வீணேகெடலாமா வாவா

3. வர்மஞ்செய்தல் முறையா—எந்தன்
வாழ்நாள்வளர் பிறையா
தர்மந்தனிற்குறையா—இன்னஞ்
சலஞ்சாதித்தல் பொறையா வாவா

4. ஆலோலிதமுகனே—நித்திய
அமலானந்த சுகனே
மேலோர்கள்சமுகனே—தயை
மிகும்வேத நாயகனே வாவா

---

73. இராகம் - சஹானு, ஆதி தாளம்.

பல்லவி

கருணை நீசெய்யவேண்டுமே—சுவாமி கருணை

அநுபல்லவி

சரணாகதியென உனையடைந்தேனே
சாதகம்வேண்டியே உனைத்தொடர்ந்தேனே கருணை

சரணங்கள்

1. மாயவாழ்வெனும் பெருவாரிதிச்சுழலே
மாட்டியேஅலைபடும் நானொருவிழலே
காயமாகியசிறு காற்றசைகுழலே
கழியும்போதுநற் கதிமலர்க்கழலே கருணை

2. சலத்தையல்லாது தாமரைக்குண்டோநிலையே
தரையில்ஊன்றுப்பயிர் எடுக்குமோதலையே
நிலத்திலேநீயலால் நிலையெனக்கிலையே
நீமுகம்பார்த்தருள் நிரஞ்சனமலையே கருணை

3. சந்திரசூரியர் உள்ளமட்டும் வாழ்நாளா
சாவையேஜெயித்திட என்கையில்வாளா
தந்தையேஉனது சோதனைக்குநான்ஆளா
சர்வசாதக பரமதயாளா கருணை

4. அகணித குண அகிலாண்ட விலாச
அபரிமிதானந்த தற்பரமேசா
விகசகிருபாகர விமலப்பிரகாசா
வேதநாயகன் இதய நிவேசா — கருணை

---

74. இராகம் - ஈசமநோரி, ரூபக தாளம்.

பல்லவி

அபயம் நீயருளுவாய்—ஆதியே—அநுதினம் — அப

அநுபல்லவி

உபயபாதம் நம்பினேன்—ஓ அநாதியே—அநுதினம் — அப

சரணங்கள்

1. அலைகடற்சிறு துரும்புபோல அலைந்துவாடினேன்
உலைமெழுகெனஉள்ளமுருகி உன்னைநாடினேன்—தினமும் — அப

2. நீர்க்குமிழியைநிகரும் வாழ்வைநிலையென்றெண்ணினேன்
மூர்க்கமாகக் கொடியபாவமுழுதும் பண்ணினேன்-தினமும் — அப

3. பாசக்காற்றிற்பஞ்சுபோலப் பறந்துதயங்கினேன்
ஆசைக்கடலிற்மூழ்கிமூழ்கி அறிவுமயங்கினேன்—தினமும் — அப

4. ஆண்டவனீ அடிமை நான் எனை ஆளவொண்ணாதோ
நீண்டஉலகம்ஏழையென்றெனை நிந்தைபண்ணுதோ-தினமும் — அப

5. புவனரக்ஷணகாரணார்த்த புருஷவேஷனே
பவவிமோசன வேதநாயக பலவிசேஷனே—தினமும் — அப

---

75. இராகம் - பியாகடை, ஆதி தாளம்.

பல்லவி

ஏதோசோதனை—இன்னம்என் சாதனை
ஏகாதிபதியே—நிதியே—எளியேன்மேல் — ஏதோ

அநுபல்லவி

போதோ தயசுர பூஜிதபாதா
பூதபேதகா ரணசுகதாதா — ஏதோ

சரணங்கள்

1. தந்தைதாயொடுபல தனையரையெடுத்தாய்
தாரங்கள்மூவர்க்குச் சாசுவதங்கொடுத்தாய்
சொந்தமாகியஉடற் சுகத்தினைக்கெடுத்தாய்
ஸ்வாமி நீயிந்த வாறுகைவிடுத்தாய் ஏதோ

2. ஒருகையால் அடிப்பாய் ஒருகையாற்பிடிப்பாய்
உதவியில்லாமலே,உன்னெண்ணமுடிப்பாய்
பெருமலைகளையுமே பிடுங்கிப்பந்தடிப்பாய்
பிரமாண்டங்களைப் பிளந்திடஇடிப்பாய் ஏதோ

3. துன்பஞ்செய்வதுபோல் சுகங்களைக்கொடுப்பாய்
துஷ்டர்கள்மீதில்லவோ துங்கையெடுப்பாய்
அன்புள்ள தாயைப்போல் அடியரை அடுப்பாய்
அவர்களைத்துயரணு காமலேதடுப்பாய் ஏதோ

4. அதுலஅக்ஷயகுரு பரநரவேஷா
அமிர்தவருஷதுல் லியமிர்துபாஷா
விதூரகிர்தோஷகிர் விகற்பவிசேஷா
வேதநாயகவந் திதகுணபூஷா ஏதோ

---

## 76. இராகம் - தோடி, ஆதி தாளம்.

பல்லவி

ஏதுபராமுகம்—ஏழையென்மீது
ஏகனே—யோகனே—மாகன—தியாகனே ஏது

அநுபல்லவி

வேதபோதக அநாதரக்ஷணனே
மேகவாகன தெய்விகலக்ஷணனே ஏது

சரணங்கள்

1. அநித்யசுகந்தந்தாய் அதைநான்கேட்டேனோ
ஆனந்தந்தரில்அநு பவிக்கமாட்டேனோ
இனித்தஉன்பாதத்தில் இதயம்நாட்டேனோ
ஈனமாமாயையை எதிர்த்துவாட்டேனோ ஏது

2. ஐயனேஎன்னைக் கேளாமல்முன்நீயே
அரியமானிடஜென்மம் தந்தாயே
வையகமீதுநான் உனக்கொருசேயே
மதியருள்வாய்பெற்று வளர்த்திடுந்தாயே ஏது

3. முந்திநீபலருக்குக் காட்டினுபுனையே
முக்தருக்குக்கொடுத்தனை மோக்ஷமாமலையே
பக்தியிலாகுமோ ஓரவஞ்சனையே
பக்ஷமாயெனக்கருள் பாசுதந்தனையே ஏது

4. அகடிதகடன சாமர்த்தியப்ரதாபா
அசலசுஜநவாற் சல்லியநிஷ்கோபா
சகலசுலக்ஷண தத்துவசொரூபா
தாசன்வேதநா யகன்மனோதீபா ஏது

---

## 77. இராகம் - கமாஸ், ஆதி தாளம்.

பல்லவி

ஆரணமயநய பூரணனே
உனதமல அடிசரணம் ஆரண

அநுபல்லவி

பாரகோரபரி காரகுணகர
வீரதீரஉப காரமனோகர ஆரண

சரணங்கள்

1. உனைநிதம்நினைவுறும் எனைஅடர்வினை அகலாதா—நாதா
உலககலகமயல் விலகஇலகருளை நீதா
கனஉலகஜநக அநகதிநகரமெய்
காவலா அடியர் ஆவலா அருள்செய் ஆரண

2. துரிதரஹிதகுண சரிதசுகிர் தபரமேசா—நேசா
சுஜனபஜனமிர்து வசனரசன இதிகாசா
சாதவாதஅன வாதவிரதகர
சாபவிமோசனபிர தாபவிலாசன ஆரண

3. கனககனபுவன பவனகவனபரிபாலா—மூலா
காரணசரணகுண கிரணபரண அநுகூலா
விநயநிலயஸ்வய விஜய மயஅபய
வேதநாயகன் மனோதயஅதிசய ஆரண

---

78. இராகம் - ரீதிகௌளை, ரூபக தாளம்.

பல்லவி

சரணஞ்சர்வேசா—எனை ரக்ஷிக்கத்
தருணமிது பிரகாசா — சரணஞ்

அநுபல்லவி

கருணாலயபர காயப்பிரவேசா
பரமசுகோதய பாபவிநாசா — சரணஞ்

சரணங்கள்

1. நீயேகுருமூர்த்தி—உனக்குச்சிறு
நாயேன்வித்தியார்த்தி
தூயாஉபதேசஞ் சொலிஇஷ்டபூர்த்தி
ஈயிற்குருசீஷர் இருவருக்குங்கீர்த்தி — சரணஞ்

2. நீதான்பரஞ்சோதி—எனஉலகின்
மீதேபெருங்கியாதி
வேதாமலவிருள் விலக்குதல்நீதி
ஆதாரமாகஉன் னருளைப்பிரசாதி — சரணஞ்

3. ஆதிகாரணநாதா—பரமஞான
ஜோதிமயஅபேதா
பாதகமோசன பாக்கியப்பிரசாதா
நீதவேதநாயக நித்தியசங்கீதா — சரணஞ்

———

79. இராகம் - லலிதா, ரூபக தாளம்.

பல்லவி

இன்னந்தாமதம் ஏது ஜகநாதா — இன்னங்

அநுபல்லவி

நன்னயமதாக உனை—நம்பினவனுன் அலவோ — இன்னங்

சரணங்கள்

1. சீலம்அருளிற் செலவோ
சேயுனக்கு நான் அலவோ
மேலுமென்ன தான்சொலவோ
வேலையுனக்குப் பலவோ — இன்னங்

2. சர்குஜன ரக்ஷணனே
தாசர்கள்பிர தக்ஷணனே
தோமிர்த பக்ஷணனே
கீர்த்திகொள் சுலக்ஷணனே இன்னங்

3. ஈசனேநான் உன்னடிமை
எப்பொருளும் உன்னுடைமை
நேசமுடன் என்மடமை
நீக்கிடுவ துன்கடமை இன்னங்

4. சாதக குணபரனே
சர்வபுவ னாதரனே
வேதநாயகன் ஸ்மரனே
வேகதுரித ஹரனே இன்னங்

---

80. இராகம் - கெங்காதரணி, ஆதி தாளம்.

பல்லவி

உனைநானே—தொழுவரம்—அருள்கோனே உனை

அநுபல்லவி

விநயசுஜனசே விதபெருமானே
வேதமுடிவில் நடனம்புரிவோனே உனை

சரணங்கள்

1. சிந்தைமீதுனது பாதமேதியானம்
செய்யநீயருள்வாய் திவ்வியஞானம்
தந்தைநீயறியு மேசமஸ்தானம்
தனயன்மீதில்லை யோஅபிமானம் உனை

2. ஈசனேயெனது வார்த்தைகள்பொய்யே
இந்தவார்த்தையொன்று மாத்திரம்மெய்யே
பாசமூடுமனம் வெயிலுறுநெய்யே
பாவம்நீங்கும்படி நீதயைசெய்யே உனை

3. அடருமலசலாதி களநிறைபேழை
ஆனமாயஉட லாகியபாழை
திடமென்றெண்ணி நிறைப்பேன்அதிற்கூழை
சினஞ்செய்யாதே நான்மிகஏழை உனை

4. சகலலோகம்அடங் காதயர்காத்ரா
சமமிலாக்கபட காடகசூத்ரா
சுகப்பிரதாயக கிருபாகரநேத்ரா
துதிசெய்வேதநா யகன்மனக்ஷேத்ரா — உனை

---

81. இராகம் - பூரி கல்யாணி, ரூபக தாளம்.

பல்லவி

கருணாகரமூர்த்தி—காப்பதுவேகீர்த்தி — கருணா

அநுபல்லவி

அருணோதய மாசரீர
அற்புத நராவதார — கருணா

சரணங்கள்

1. தேகம்வளர்ப்பதே என்விர்த்தி
தினந்துர்க்குணமே பிரவிர்த்தி
ஏகமான சக்ரவர்த்தி
எனக்குநீயருள் பாபநிவர்த்தி — கருணா

2. அற்பமான போகபோக்கியம்
அழிந்துபோம்இது வேதவாக்கியம்
தற்பரானினைக் காணும்பாக்கியம்
தந்திடில்அது சர்வசிலாக்கியம் — கருணா

3. பாதகந்தனைச் சர்வநாசம்
பண்ணுவதில் உண்டோபிரயாசம்
வேதநாயகா நின்னேசம்
விளங்கிட அருள்வாய் பிரகாசம் — கருணா

---

82. இராகம் - பரசு, திரிபுடை தாளம்.

பல்லவி

சித்தம் எப்படியோ—ஐயா—நின் சித்தம்எப்படியோ — சித்தம்

அநுபல்லவி

உத்தமனுகஎன்னை உயர்த்திடுவாயோ
கர்த்தனேநீயென்னைக் கைவிடுவாயோ — சித்தம்

சரணங்கள்

1. அருள்புரிவாயோ—அருந்தவப்
பொருள்சொரி வாயோ
தருமவானும்படி தான்தெரிவாயோ
இருள்மூடும்பாவியென் றெனைப்பிரிவாயோ சித்தம்

2. பாதஞ்சேர்ப்பாயோ—எந்தன்மனக்
கேதந்தீர்ப்பாயோ
ஆதன்செய்வினை அடியோடேபேர்ப்பாயோ
ஏதுங்கதிஇல்லானென் றிரங்கிப்பார்ப்பாயோ சித்தம்

3. வாடிநொந்தேனே—மெய்ஞ்ஞானக்கண்
மூடிநைந்தேனே
நாடியாள்வாயென்று நம்பிவந்தேனே
பாடும்வேதநாயகன் பருகுஞ்செந்தேனே சித்தம்

---

83. இராகம் - சஹானா, அடதாள சாப்பு.

பல்லவி

எப்படியும் பரமே—நலம்பெற
ஈந்தருள்வாய் வரமே எப்

அநுபல்லவி

செப்பருமாணிக்க தீபசொரூபனே
தேவேமனமேநொந்தேன்—காவேயெனவேவந்தேன் எப்

சரணங்கள்

1. கேவலம்வாடினேன் கேள்விமுறையில்லையோ—எந்தன்
சீவன்பிழைக்கச்செய்ய வல்லவனீயல்லையோ
பாவனானெனைப் பண்ணுதல்பாரமோ
பாகேகனியேசத்தே—ஓகோதனியேவித்தே எப்

2. அற்பன்ஆனாலும் அன்னைக்குப்பிள்ளை—அல்லவோ
பற்பலவாபடித்துப் படித்துச்சொல்லவோ
கற்பகோடிகாலங் கண்டுமுடிவில்லாக்
கண்ணேமணியேபொன்னே—விண்ணே அணியே சொன்
னேன் எப்

3. இன்பதுன்பங்கள் இரண்டுஞ்சமசித்தமே—தந்து
நின்பதசேவை நினைக்கச்செய்வாய்நித்தமே
அன்பன்வேத நாயகன் அகத்தேயணி
ஆணிப்பொருளேமுத்தே காணப்பெருவோர்சொத்தே எப்

---

## 84. இராகம் - கல்யாணி, அடதாள சாப்பு.

பல்லவி

உன்னையெனக்குக்காட்டையா—காட்டாமல்சும்மா
ஒளித்தென்ன விளையாட்டையா உன்னை

அநுபல்லவி

தன்னைப்பாராமலே தன்பிள்ளைகண்மூடி
தனம்ஊட்டுந்தாயுண்டோ சாமிநீதயைகூடி உன்னை

சரணங்கள்

1. கறவைதனைப்பிரிந்த கன்றுகதறல்போலும்
கணவன்தனைப்பிரிந்து கலங்கும்உத்தமிபோலும்
இறகுகள்பறிகொடுத் தேங்கும்பறவைபோலும்
இருகண்ணுந்தெரியாத ஈனக்குருடர்போலும்

ஏங்கினேன்சுகம்—நீங்கினேன்துயர்
தாங்கினேன்மனம்—வீங்கினேன் நீ உன்னை

2. நினைக்கநினைக்கஎந்தன் நெஞ்சமெல்லாம்ருசிக்கும்
நின்னைப்புகழும்வாயே நித்தியாமிர்தம்புசிக்கும்
கனக்கும்நின்னடிகாணக் கண்கள்தினம்பசிக்கும்
கர்த்தனேநினைக்கண்டாற் கவலையெல்லாம்நசிக்கும்

கனத்திலேனுங்க—கணத்திலேனுமென்
மனத்திலேனும்சொப்—பனத்திலேனும் நீ உன்னை

3. விண்ணேநினையல்லாமல் வேறொன்றைத்தொடுவேனோ
மேதினியெங்குந்தேடி வேதனைப்படுவேனோ
கண்ணேமணியேநினைக் கண்டால்நான்விடுவேனோ
கட்டிக்கொண்டானந்தங் கலக்கப்பின்னிடுவேனோ

கருத்தில்சூடுவன்—வருத்தம்போடுவன்
நிருத்தமாடுவன்—விருத்தம்பாடுவன் உன்னை

4. தேவனேஉன்னைக்கண்டால் கிட்டிதோஷந்தொடுமோ
திவ்யதேஜோமயமென் தேகந்தனைச்சுடுமோ
கூவுங்கோழிமிதித்தாற் குஞ்சுமுடம்படுமோ
கொல்லுஞ்சிங்கமானாலும் குட்டிகள் அஞ்சிடுமோ

கோலனே அநு—கூலனே பரி
பாலனேகன—மூலனே நீ    உன்னை

5. ஆணல்லபெண்ணல்ல ஐம்பூதஞ்சுடரல்ல
அரியயன்சிவனல்ல அதுவல்லஇதுவல்ல
காணருமுன்திவ்ய காந்திவிரியும்நல்ல
கனவடிவினைக்காணக் காதல்கொண்டேன்வல்ல

காரணசுக—பூரணகுண
தாரணகன—ஆரணநீ    உன்னை

6. தேனேகனியேதெவிட்டாததெள்ளமிர்தமே
சீனியேகரும்பே தித்திக்கும்இரசமே
வானேபுவியேசுக வாழ்வேபெரும்பதமே
மதிக்கும்வேதநாயகன் மகிழுமனோகரனே

வாடினேன்கவி—பாடினேன்உனை
நாடினேன்தினந்—தேடினேன் நீ    உன்னை

---

85. இராகம் - பங்காளா, ஆதி தாளம்.

பல்லவி

சஞ்சலமாய்நெஞ்சமிக உடைந்தேனே—இனித்
தஞ்சமெனஉன்சரணம் அடைந்தேனே—ஸ்வாமி    சஞ்சல

அநுபல்லவி

வஞ்சம்பிர பஞ்சமெனும்
நஞ்சநதி மூழ்கியே    சஞ்சல

சரணங்கள்

1. இட்டவலை பட்டயரும் மான்போலே—வெயில்
சுட்டஜலம்விட்டகலும் மீன்போலே—ஸ்வாமி    சஞ்சல

2. பொய்யுலகைமெய்யெனவே தடுமாறி—நாளும்
ஐயகோமையலெனுங் கடுமீறி—ஸ்வாமி    சஞ்சல

3. கொட்டுமத்திற் பட்டுடையுந் தயிர்போல—சவத்
தட்டுவரக்கெட்டுலரும் பயிர்போலே—ஸ்வாமி சஞ்சல

4. பாய்புலியின் வாயில்உறுபசுபோலே—பெற்ற
தாய்காம்விட் டேஅலருஞ் சிசுபோலே—ஸ்வாமி சஞ்சல

5. ஈயவே சகாயமொன்றுங் கிடையாதோ—நல்ல
ஞாயமனம்நீய நளத் தடையேதோ—ஸ்வாமி சஞ்சல

6. மாயமலநோயகலும் விசுவேசா—வேத
நாயகன் னேயமனுக் குகைவாசா—ஸ்வாமி சஞ்சல

---

86. இராகம் - சுத்தசாவேரி, ரூபக தாளம.

பல்லவி

தருணந்தருணந் தயைசெய்வாயையா—ஓ
தேவ தேவா தருணந்

அநுபல்லவி

ஒருவனேஜன்ம லயஅபாவா
ஓ ஓ மகானுபாவா தருணந்

சரணங்கள்

1. சித்தஞ்சேற்றில் நட்டகம்பம்
ஜெகத்தில்இதற்குத் தினமும்கம்பம்
நித்தங்கவலை நிறைந்தகும்பம்
நீயேயினியெனக் கவலம்பம் தருணந்

2. சோதனைக்குநான் பாத்திரவானோ
துன்பமூட்டை சுமக்கநானோ
சாதகஞ்செயிற் பழுதுதானோ
தள்ளினாலும் நான்போவேனோ தருணந்

3. வயிறுவளர்ப்பதே என்வேலை
மற்றநோம் விஷயலீலை
உயிருக்குயிரே ஞானப்பாலை
ஊட்டுவாய்தொழு தேன்உன்காலை தருணந்

4. சப்தஸ்பரிச ரசசுகந்தா
தர்மரூப பிரமாநந்தா
வித்தகசுஜ நானுபந்தா
வேதநாய கப்பிரபந்தா தருணந்

---

87. இராகம் - தேவமனோகரி, ஏக தாளம்.

பல்லவி

இன்னமுந்தாமதமேன்—என் ஸ்வாமி இன்ன

அநுபல்லவி

உன்னதமாகிய துரியாதீதா
உலகாதிசர்வ காரணபூதா இன்ன

சரணங்கள்

1. மழைமுகங்காணும் பயிர்போலவாடி
மாதாதனைவிட்ட சேய்போலோடி
தழையும்உன்குணசரித் திரந்தன்னைப்பாடி
சாமிநானுனையடைந் தேன்கதிதேடி இன்ன

2. பத்தனைபோலநான் போடுவேன்வெளிச்சம்
பாவத்தின்கடலுக்கு நானொருமச்சம்
அத்தனேமுனியாதே கொண்டேன்அச்சம்
அருவினைபோக்கி நீ அருள்வாய்ஸ்வச்சம் இன்ன

3. அரசேநீயெனைக் கைவிடலாமா
அருளேசெயில் உன்கைப் பொருளேபோமா
திருவரம்ஈயா விடில்வினைசாமா
தேவமனோகர திவ்யசோமா இன்ன

4. அனவரதசுகிர்த ஆத்மசொரூபா
அனந்தகல்யாணகுண அனகப்பிரதாபா
தினகர தினகர ஞகியதீபா
சிறியன் வேதநாயகன் இதயசல்லாபா இன்ன

---

88. இராகம் - சாமா, ஆதி தாளம்.

பல்லவி

உன்னைத்தவிர வேறென்னைத் தாங்கிடப்
பின்னைத்துணையிலை மன்னர்க்கரசே உன்னை

அநுபல்லவி

அன்னைக்கிணையாகிய கனபிரபுவே
உன்னற்கரிதாகிய மாவிபுவே உன்னை

சரணங்கள்

1. நீமுகம்பார்த்திடில் அணுவும்பர்வதமே
நீமுனிந்தால்பெரு மலைகளும்அதமே
தாமதம்நீசெயிற் பிழைப்பதெவ்விதமே
தயைநீபுரியஇச் சமயம்உசிதமே — உன்னை

2. நீரைஅடுத்தவர்க் கில்லைஜலநஷ்டம்
நின்னை அடுத்தவர்க் குண்டோநஷ்டம்
ஆரையடுக்கினும் உண்டோ அதிஷ்டம்
ஐயாநினக்கன்ப னாகஎன்னிஷ்டம் — உன்னை

3. ஊரார்மெச்சிடப் பாடுவேன்பாட்டு
உன்புகழ்பாடவென் னூல்வாய்பூட்டு
சீராகியபெரி யோர்சபைநீட்டு
தீயோருடன்எனக் கனுதினங்கூட்டு — உன்னை

4. ஆதிமத்தியாந்த அபாவப்பிரகாரா
அண்டசராசர அகிலாதாரா
பூதநிர்மாணநிர் வாகசங்காரா
போதவேதநாயக புண்யசரீரா — உன்னை

---

## 89. இராகம் - சுத்தசாவேரி, ஆதி தாளம்.

பல்லவி

நானே உனை நம்பினேனே—நலம்
தானே அருள் கனவானே — நானே

அநுபல்லவி

வானே எனச்சுகத் தேனே பொழிந்திடும்
மன்னாபிர-சன்னாதினம்-என்னாவுறவும்-முன்னாநிதம் — நானே

சரணங்கள்

1. காயப்பலதுவாரக் கந்தல்—அதைக்
காக்கநான்போடுவேன் வாய்ப்பந்தல்
மாயவலையிற்பட்டு மதியும் விதியுங்கெட்டு
மண்டுவினை-கொண்டுமிக-அண்டுதுய-ருண்டுதினம் — நானே

2. அருணகோடிப்பிரகாச காத்திரா—அதி
அற்புதவேதாகம சாஸ்திரா
கருணானந்தநேத்ரா தனபக்த ஜனஸ்தோத்திரா
காப்பாய்முகம்—பார்ப்பாய்வினை—தீர்ப்பாய்அடி—சேர்ப்பாய்
[நிதம் நானே

3. விபுதகணவந்திதச் சரணா - காணும்
வேதநாயகன் அந்தக் காரணா
சுபமங்க ளதாரணா சுஜநகுலாதாரணா
தூயாகன—நேயாபுவித்—தாயான—சகாயா நிதம் நானே

---

## 90. இராகம் - சஹானா, ஆதி தாளம்.

பல்லவி

இந்தவேளை வந்துன் அருள் தந்தருளுவாய் இந்த

அநுபல்லவி

வந்தனை நிரந்தம் புரிந்தேன் ஐயனே இந்த

சரணங்கள்

1. அன்னைபிதாவுன்னையன்றிப் பின்னையாரையா
என்னைநிதந் தின்னும்வினை தன்னைத்தீரையா
மின்னுகின்றபொன்னுலகந் தன்னில்வாழ்மெய்யா இந்த

2. பூதலத்தில்ஆதாரவுன் பாதஇணையே
பேதகமா யேதனக்கிங் கோதயிணையே
தீதகலுஞ் சாதகர்க் கபேததுணையே இந்த

3. தீயநெஞ்சில் தூயஅறந் தோயஇலையே
மாயையெனும் பேய்செய்அநி யாயமலையே
நேயன்வேத நாயகனுக் காயநிலையே இந்த

---

## 91. இராகம் - சாமந்தா, ஆதி தாளம்.

பல்லவி

மெஞ்ஞானங்கொடுப்பாய்—ஸ்வாமி
அஞ்ஞானந்தடுப்பாய்—ஸ்வாமி மெய்

அநுபல்லவி

பொய்ஞ்ஞானியர் அல்லாற் பேற்கருணை
பூண்டவனேயென் ஆண்டவனே நீ மெய்

சரணங்கள்

1. ஆஸ்திகள்பாஸ்திகள் யாவையும்வேண்டேன்
அநித்தியப்பொருள்நீ அருளிலுந்தீண்டேன்
சாஸ்திரம்சொல்லும் வழிஇனித்தாண்டேன்
தருவெனநீண்டேன் — திருவடி பூண்டேன் மெய்

2. அகமேகட்டுக் கடங்காக்காளை
ஐயோவீணே அழித்ததுநாளை
இகமேலேநம்பி னேன்மலர்த்தாளை
என்னவோநாளை — இதுநல்லவேளை மெய்

3. அந்நியர்க்குரைப்பேன் நான்உபதேசம்
அடியேன்செய்கை களேஆபாசம்
என்னசொல்வேன்யென் இதயப்பசாசம்
இதற்குன்மேல்நேசம் இல்லவநேசம் மெய்

4. அத்தனேயெளியர்க் கன்னமும்ஊட்டேன்
அறுத்தகைக்குச் சுண்ணாம்புமேநீட்டேன்
உத்தமமார்க்கத்தில் உள்ளத்தைநாட்டேன்
உணவரங்கேட்டேன் — இனிவிடமாட்டேன் மெய்

5. அவன்அவள்அதுவென அடங்காமூலா
அகண்டாதீத அபேதவிலாசா
சிவமுறுவேத நாயகன் அநுகூலா
ஜெகபரிபாலா — சுகமுறுசீலா மெய்

---

92. இராகம் - பரசு, ஆதி தாளம்.

பல்லவி

தேவாதிதேவபல ஜீவாதிகாரணா — உன்
சேவடியை நம்பினேன் — ஓ தேவாதி

அநுபல்லவி

நாவாரநானேபல தேவாரம்பாடவே
நாதாவரம் — நீதாகண தேவாதி

சரணங்கள்

1 அகஇருள்மூடினேன் மிகமிகவாடினேன்
அஞ்சாதேயென்றுசொல்லி ஆளொண்ணாதோ
இகபரம்நாடினேன் சுகமிலைதேடினேன்
என்மேல்இரக்கம்உனக் கேநண்ணாதோ
பகவானேநீயெனது முகம்நோக்கியேதயை
பண்ணியருள்—புண்ணியர்தொழும் தேவாதி

2. அன்னையும்பிதாவும்நீ ஆவியும்உடலும்நீ
ஆசாரியன்கடவுள் யாவும்நீயே
முன்னும்நீபின்னும்நீ முத்திநீசித்திநீ
மூலாதிகாரணமும் மூர்த்திநீயே
நின்நேசவாரியில்நான் எந்நேரமும்படிய
நித்தியம்பல சித்தியருள் தேவாதி

3. ஏழைநான் அல்லவோ என்னதான்சொல்லவோ
ஈசாஎன்மீதுதயை எண்ணுவாயே
பாழுடலைநம்பினேன் தாழுமனம்வெம்பினேன்
பாசாந்தகாரம்அறப் பண்ணுவாயே
சூழும்அடியார்கள்மனம் வாழும்வேதநாயகா
சுத்தமுறு சித்தம்அருள் தேவாதி

---

93. இராகம் - பலஹம்சா, ஆதி தாளம்.

பல்லவி

ஞானமார்க்கம் நானேசேர
நல்வரம் அருளையனே ஞான

அநுபல்லவி

ஈனஅசேதன இருள்வழிநீங்கத்
தானமுமோனமுந் தர்மமும்ஓங்க ஞான

சரணங்கள்

1. நீசனானாலும்உன் தாசனான் அலவோ
நின்னையல்லால்தெய்வம் இன்னமும்பலவோ

ஈசனேஎன்குறை எவரிடஞ்சொலவோ
என்மொழிகாட்டிலே எரித்திடுநிலவோ — ஞான

2. கர்த்தனேஒழியாக் கவலைபிரபஞ்சம்
கண்ணியிற்பறவைபோற் கலங்கினேன்நெஞ்சம்
உத்தமகுணாந்தா உனக்குண்டோபஞ்சம்
உன்னையல்லால் இனி வேறிலைதஞ்சம் — ஞான

3. அமரர்நரர்சோபன அமிர்தபக்ஷணனே
அனந்தபேதக ஜீவாத்மரக்ஷணனே
சமரசஞானசற் குணசுலக்ஷணனே
தாசன்வேதநாயகன் பிரதக்ஷணனே — ஞான

---

## 94. இராகம் - சஹானா, ரூபக தாளம்.

### பல்லவி

உதவிசெய்யலாகாதா — ஓ ஜகநாதா — உதவி

### அநுபல்லவி

நிதநிதம்உன திணையடிகளை
நெஞ்சில்நினைத்திட வரம்நீ — உதவி

### சரணங்கள்

1. அடியேன்துயர் படவேதகுமா
சுடர்முன்னிருள் தானேபுகுமா
கொடிதாகிய வினையால்நிலை
குலைந்தேன் — மனம் — அலைந்தேன் — உதவி

2. மனைவாழ்வுறு துயர்தான்மலையே
உனையல்லது கதிவேறிலையே
அனையேகொடு வினையால்மனம்
அயர்ந்தேன் — தினம் — பயந்தேன் — உதவி

3. சுரசேவித பரமேசுரனே
நரபோஷக கருணாகரனே
வரவேதநா யகனே குண
வரனே — பரம் — பரனே — உதவி

95. இராகம் - சாளங்கபைரவி, ஆதி தாளம்.

பல்லவி

உன்னைமறவாமல் எனக்கருள்வரமே
பரமே—சுபகரமே உன்னை

அநுபல்லவி

பொன்னைநாடெளியர் போலும்எக்காலம்
அன்னைதன்னைமறவாப் பிள்ளைபோலும் உன்னை

சரணங்கள்

1. மங்களமாகப்பெரு வாழ்வுவந்தாலும்
சங்கமுடன்கன தாழ்வுவந்தாலும் உன்னை

2. பூமண்டலம்எங்கும் புகழ்ச்சிவந்தாலும்
ஈமங்கொள்மாலையென இகழ்ச்சிவந்தாலும் உன்னை

3. மகிழ்வுறவேவெகு மானம்வந்தாலும்
இகழ்வுறவேகன ஈனம்வந்தாலும் உன்னை

4. தலைகீழாஇத் தரைபுரண்டாலும்
அலைகடல்பெயர்ந்ததன் கரைபுரண்டாலும் உன்னை

5. அருமையாகிய சதானந்தநிலையே
மருவும்வேதநாயகன்மகிழ்கலையே உன்னை

---

96. இராகம் - கண்டா, ஆதி தாளம்.

பல்லவி

வாவாதேவே—வந்தெனைக்
காவாயோ கோவே வாவா

அநுபல்லவி

காவார்பூவே—கலையோர்பாவே
ஓதுவேதாவே வாவா

சரணங்கள்

1. வனவேடன் வலையே—மாட்டி—மனநோயுறுங்கலையே
எனவேதுயர் அலையே-சார்ந்தஎன்-இடர்யாவையுந்தொலையே
வனமார்நிலையே—மதியோர்கலையே
கனமார்குணமலையே வாவா

2. உடல்விழுந்திடுமுனமே—பரனே—உனையேஅறிந்தனமே
திடமானஎன்மனமே—நினைந்தறம்—செபவே அருள்கனமே
அடியார்தனமே—அயலார்சினமே
படியார்தமக்கினமே வாவா

3. நினையாஎன்மதியே—உலகில்—நிதமும்செயும்சதியே
வினைதீர் இதுததியே—பரவும்—வேதநாயகன்நிதியே
அனைவோர்திதியே—அருள்வாரிதியே
தலைநேர் பாகதியே வாவா

---

97. இராகம் - உசேனி, ஆதி தாளம்.

பல்லவி

தருணம் ஏதையா—இக்கால—ஹரணம் ஏதையா தருணம்

அநுபல்லவி

கருணையால்உலகனைத்துந் தாங்குபகாரா—தீரா—உதாரா
காணும்பிரபஞ்சம்—தனிற்சிக்கிக்
கோணும்என்னெஞ்சம்—அனுதினம்
பேணும்பொய்வஞ்சகம்—இனிஉந்தன்
மாணடிதஞ்சம்—எனைத்தொடர்
கருமந்தனையேநீக்க தருமந்தனைநிலையாக்க தருணம்

சரணங்கள்

1. ஆண்டாள் அடிமையை வேண்டாமெனத்தள்ளின்
ஐயாபுகலினிஏது—மிக
நீண்டநின்கால்களைப் பூண்டுகொண்டேன்விடேன்
நீ எங்கினிச்செல்லதோது—சற்றும்
தீண்டாதெனைத் தள்ளினுலும்விடுவேனே
திருவே—தருவே—குருவே
தீனன்என்மீது—தினதயி
மானம்விடாது—தினமதி
யீனஞ்செய்தீது—தொலையமெய்ஞ்
ஞானம்நீஓது பழுதறு
சித்தத்தமரும்கோவே—கர்த்தத்துவமுறுதேவே தருணம்

2. நீயென்னை நீங்கிடில் எங்கும்உள்ளோனெனும்
நின்பெயர்க்குக் குறைவாமே—அழுஞ்
சேயர்தமக்கமு தீயாதிருப்பரோ
சிறந்த அன்னையர் தாமே—வரம்
ஆயிரந்தரங் கேட்டுங் கொடாயிது
அழகா—குழகா—பழகா
தற்றபொன்போலே—நடையின்றி
முற்றயேன்மேலே—பலகலை
கற்றுப்பொய்மாலே—கொண்டேனென்தனம்
சிற்றறிவாலே—எனைநிதம்
ஆளாய்பலபுவிநாதா—மாளாநலமுறுநீதா — தருணம்

3. எத்தனைசொல்லினுஞ் சித்தம்நன்மார்க்கத்தில்
என்றும்பதிந்திட இல்லை—மிக
இத்தரைஎங்கும் பிரசித்தனேநீசற்
றிளகச்செய்வதாயிந்தக்கல்லை—உயர்
வித்தகனே வேதநாயகன்போற்றிடும்
வேதா—நாதா—அபேதா
மின்னும்பிரக்யாதா—அடியேன்மேல்
இன்னமும்வாதா—எனை அஞ்சல்
என்னவொண்ணாதா—நின்காதில்
சொல்நுழையாதா—அநுதினம்
வேதத்தமர்சர்வேசா—தீதற்றவர்மனவாசா — தருணம்

---

98 இராகம் - பூரிகல்யாணி, ஆதி தாளம்.

பல்லவி

நம்பினேன் உன்னையே—தற்காத்தருள்
வெம்பியஎன்னையே—அனுதினம் — நம்பி

அநுபல்லவி

அம்புவியெங்கும்—நிரம்புபலஉயிர்க்
கின்பம்பொழிபுயலே—உந்தன்செயலே
உண்டோ அயலே—அநுதினம் — நம்பி

சரணங்கள்

1. புவனகாரண—பவநிவாரண—நவஉதாரணனே
சம்பூரணனே—மெய்யாரணனே—அநுதினம் நம்பி

2. கோரவினைப்பரி—கார அகிலவிஸ்—தார அதிகாரா
உபகாரா—அதிதீரா—அநுதினம் நம்பி

3. சுகுணசேகர—மிகுமனோகர—சுகிர்தசாகரனே
பராபரனே—தயாபரனே—அநுதினம் நம்பி

4. பஜிக்கும்தொண்டர்கள்—புசிக்கபுசிக்க—ருசிக்கும் தேன்மயமே
அதிசயமே—அருள்நயமே—அநுதினம் நம்பி

5. வேதநாயகன்—போதமுறப்பிர—சாதம்அருள்பொருளே
மனஇருளே—தொலைத்தருளே—அநுதினம் நம்பி

---

99. இராகம் - நாகத்தொனி திசிரம். திரிபுடை. தாளம்.

பல்லவி

தேவாதிதேவனே—ஜீவனேபிரபாவனே தேவாதி

அநுபல்லவி

ஜீவாதிகாரனே—தீரனே—சூரனே
ஜெகத்திலே மனம்வாடிநொந்தேன்
மகத்துவே உனைநாடிவந்தேன் தேவாதி

சரணங்கள்

1. எங்கும்நிறையும்நீ எனக்குன்னைக்காட்டாய்
ஈதென்னகண்கட்டு மாயமோ
அங்கும் இங்குமே உனைத்தேடி
அலையவைத்தா பிதுஞாயமோ
தங்குபதேசம் செய்யாயின்னம்
தான் அடியேன் சிறுபிராயமோ
எங்குலதெய்வமே தாயேதந்தையே
இதுதான்புத்திர நேயமோ—கனா தேவாதி

2. எத்தனையோபிழை செய்தேன் அப்பிழை
எண்ணஉன்றனுளம் கூடுமோ
கத்தனேநீஅருள் செய்தால்என்னோடு
கருமப்பேய் போராடுமோ
அத்தனேயென்பால் நீவரில்உந்தன்
அடிகள்வருந்தி வாடுமோ

இத்தலம்மீவரில் முத்தர்கள்சமூகம்
எங்கேஎன்றனைத் தேடுமோ—உயர் தேவாதி

3. அருளிற்பெரியநீ மருளிற்பெரியனான்
ஆதரிப்பதுன் பாரமே
பொருளிற்பிரியனு யிருளுக்குரியனைப்
புரிந்தேன்துர் வியாபாரமே
ஒருமைப்பாடறு மனதுக்கேதினம
ஊரெல்லாம் சஞ்சாரமே
திருஅற்புதனே வேதநாயகனே
செய்வாய்நீ உபகாரமே—ஒரு தேவாதி

---

## 100. இராகம் - குந்தளவராளி, ஆதி தாளம்.

பல்லவி

நிதநிதம் உனையே தொழுதேனே
பதமலர் அருள்கோனே நிதம்

அநுபல்லவி

சததைவபோகா—சகலநிர்வாகா
மதுரப்பிரவாகா—வரகுணயோகா நிதம்

சரணங்கள்

1. அறம்வர இல்லையே—அகம்அறவில்லையே
மறம்ஒருமல்லையே—மனமொருசில்லையே
புறமயல்வல்லையே—புகுமதிகல்லையே
துறவறநில்லையே—துயர்வினைதொல்லையே நிதம்

2. மலம்வலர்தீயே—மனமொருபேயே
புலமொருநாயே—புலிகொடுமாசை
பலவிதமாயே—படர்வுறும்நோயே
தவமிசைநீயே—தயைபுரிவாயே நிதம்

3. அடியவர்இனமே—அருமலர்வனமே
கொடியவர்சினமே—குறையறுதனமே
முடிவறுதினமே—முறையுறுகனமே
அடிதொழும்வேதநா யகன்தரிசனமே நிதம்

### 101. இராகம் - சாமா, ஆதி தாளம்.

பல்லவி

என்ன சொன்னாலும்நீ—இரங்காதிருப்பது
ஏதோ குணக்கடலே — என்ன

அநுபல்லவி

உன்னதஏகனே—நிலகநிர்வாகனே — என்ன

சரணங்கள்

1. இகசுகம் அநுசிதம்—என்பதென் அபிமதம்
தகவுறும்உயர்பதம்—தாவெனவேநிதம் — என்ன

2. இன்னமும் ஏன்சினம்—எனக்குநின் றரிசனம்
மன்னஎன்கண்முனம்—வாவெனவேநிதம் — என்ன

3. மாயைபடாரந்திரம்—மாறலர்தந்திரம்
நீயருட்சுதந்திரம்—நீட்டெனநிரந்தரம் — என்ன

4. உலகவியாபாரமே—ஒழியாவிசாரமே
கலகசம்சாரமே—கவலைஅபாரமே — என்ன

5. அருமறைவாசகா—அடியர்பிரயோசகா
தருமப்பிரதாயகா தனிவேதநாயகா — என்ன

---

### 102. இராகம் - இந்துஸ்தான் காப்பி, ரூபக தாளம்.

பல்லவி

நாதா அடியேன்—மீதேன் கோபம் — நாதா

அநுபல்லவி

ஆதாரமாகவே அகிலத்தைத்தாங்கும் — நாதா

சரணங்கள்

1. தாரம்சுதர் இல்லாச் சந்நியாசிஎன்றேனோ
சீரூரில்லாப்பரதேசிஎன்றேனோ — நாதா

2. தந்தைதாயில்லாத தனியர் யென்றேனோ
எந்தஉயிரும்பெற்ற இனியர் என்றேனோ — நாதா

3. மன்னும்கைப்பொருள் இல்லா வறியர்என்றேனோ
சின்னஅணுவும் நுழைசிறியர் என்றேனோ — நாதா

4. உரிய ஆண்பெண்ணல்ல ஒருத்தர் என்றேனே
விரிபலயுகங்கண்ட விருத்தர் என்றேனே — நாதா

5. ஆதிஅந்தம்இல்லா அநாதி என்றேனே
சாதிகுலமில்லா நிர்சாதி என்றேனே — நாதா

6. வீடுவாசல் இல்லாத எளியர் என்றேனே
ஈடன்னம் துணியில்லா எளியர் என்றேனே — நாதா

7. மனம்புகுந் தொளிக்கின்ற மாயர் என்றேனே
உனும்நெஞ்சுக்கெட்டா உபாயர் என்றேனே — நாதா

8. சகல உலகச்சுமை தாங்கிஎன்றேனே
மிகநார் அன்புக்கு வீங்கி என்றேனே — நாதா

9. மற்றோர் கண்ணிற் படாத மாணிஎன்றேனே
முற்றும்வாய்பேசாத மௌனி என்றேனே — நாதா

10 குணமில்லார்களைக்காயும் கோபிஎன்றேனே
அணிஅங்கமில்லா அரூபிஎன்றேனே — நாதா

11. சீர்பேர்இல்லா அநாம தேயர் என்றேனே
ஆரும்துணையில்லா அபாயர் என்றேனே — நாதா

12. மாதின்றி உலகீன்ற மாயம்சொன்னேனே
வேதநாயா இன்னம் வேறென்சொன்னேனே — நாதா

---

## 103. இராகம் - பியாகு, ஆதி தாளம்.

பல்லவி

உன்னைப்போல எனக்குற்றபேர்கள்-இந்த
உலகந்தன்னில் உண்டோ

அநுபல்லவி

அன்னைதந்தை குருதேவே இந்த அகிலகாரணபிதாவே — உன்னை

சரணங்கள்

1. தந்தைதாய்க்கு மனஸ்தாபம்—வரில்
சாற்றுவார்கள்பல சாபம்—மண்ணில்
எந்தநேரமுமே பாபம்—செய்யும்
எனக்குநீசெய்வது லாபம் — உன்னை

2. அண்ணன் தம்பிக்குண்டு பாகம்—அதை
அடையுமட்டும் அவர்நேசம்—பின்பு
எண்ணுவார்கள்பல துரோகம்—நீ
ஈவைநன்மைகள் அநேகம் உன்னை

3. மனைவிபாலர்க்கன்ன வஸ்திரம்—தரும்
மட்டுமேஅவர்கள் மித்திரம்—பின்பு
வினைவர்செய்வர்பல சூத்திரம்—என்றும்
நீடும்உன்னருள் சமுத்திரம் உன்னை

4. ஏவல்மன்னர்க்குண்டு இறையே—அதை
ஈந்திடாதவர்க்குச் சிறையே—உன்னை
மேவினோர்க்கில்லை குறையே—தொழும்
வேதநாயகன் தன் இறையே உன்னை

---

104 இராகம் - காப்பி, ரூபக தாளம்.

பல்லவி

நாளே நல்லநாள்—புண்ணியம் செய்யும் நாளே

அநுபல்லவி

ஆளும்வேதநாயகன்—தாளினை பூசிக்கும் நாளே

சரணங்கள்

1. பாபமில்லாதகால—க்ஷேபமும் சுஜனசல்
லாபமுமேபாம—லாபமாகக்கொள்ளும் நாளே

2. வேதமும்பெரியவர்—போதமும்தேவசங்
கீதமும் முதலான—நாதங்களுடன்செல்லும் நாளே

3. ஞானமும் ஜீவாபி—மானமும் பான்மத
தியனேமுமேசெய்து—மோனநிலையில்நிற்கும் நாளே

4. பத்திதிகுதர்குடும்—பத்தர் யாவரும்
சித்தர்நிர்மலமுடன்—பக்தி புரிந்திடும் நாளே

5. கூனர்குருடர் அங்க—ஈனர்பிணிஉடையோர்
தீனர்முதலியோர்க்குத்—தானதருமஞ்செய்யும் நாளே

105. இராகம் - சாவேரி, ஆதி தாளம்.

பல்லவி

ஏதோ இன்னம் வாதோ இரங்காதோ உன்மனம் ஏதோ

அநுபல்லவி

வேதவரோதய—விமலச்சந்திரோதய
வித்தகநயகுண உத்தமசிரேஷ்டா
பக்தர்கள்பழுதற சித்தஅபீஷ்டா ஏதோ

சரணங்கள்

1. ஐம்புலவேடர்வேட்டை—ஆடித்திரியுங்காட்டை
வெம்பாசப்பேய்வாழ்வீட்டை—விரும்பியேதுன்பமூட்டை
மேவிமனம்அயர்ந்தேன்—நிலைமையில்லாப்
பூவின்சுகப்வியந்தேன்—அநுதினமும்
பாவவழிநயந்தேன்—இனிமேல்வரும்
சாவையெண்ணிப்பயந்தேன்—நிரந்தமும்

தரைமுதலாகஎங்கும் விரியுஞ்சுந்தரமே
அரியகருணைமழை சொரியுங்கந்தரமே ஏதோ

2. தீயமனோவியாபாரம்—தீர்ந்திடவேயிந்நேரம்
நீயருள்பரிகாரம்—தீர்ந்திடவேயிந்நேரம்
நேசஅபிமானம்—சற்றுமில்லாமல்
பேசுவேன்ஞானம் எனக்குலவ
லேசம்அநுஷ்டானம் இல்லையேஉப
தேசசன்மானம்—கொடுத்தருள்செய்

தினமனமகிழ்வுறு கனதிரவியமே
அனவரதமும்ஒளிர் தினகரமயமே ஏதோ

3. நீர்க்குமிழெனவே—நிலைவாழ்வுகனவே
பார்க்குள்உனைஉனவே—பரிந்தருள்வாய்நனவே
பாசம்குலையாதா—எனக்குமோகா
வேசம்கலையாதா—உலகம்செய்யும்
மோசம்தொலையாதா—உன்மீதுகன
நேசம்நிலையாதா—நிலைமைபெற

நிதநிரஞ்சன அபேதகுணமே
வேதநாயகன்மனப் போதமர்மணமே ஏதோ

## 106. இராகம் - பந்து, ஆதி தாளம்.

பல்லவி

நீயேசர்வசக்தன்—நல்ல
நிச்சயனேகன அக்ஷயனே நீயே

அநுபல்லவி

தாயுந்தந்தையுந் தமரும்அற்றாயே
மாயுந்தொழிலறு வாழ்வுபெற்றாயே நீயே

சரணங்கள்

1. பல்லாயிரம்அண்டம் படைப்பாய்உடைப்பாய்
எல்லாஉலகமும் எள்ளினுள் அடைப்பாய் நீயே

2. அஸ்திவாரந்தூண் அருஞ்சுவரிலையே
பத்தியாய்நீசெய்த பகிரண்டமிலையே நீயே

3. பலபொருள்தாங்கிடும் பர்வதம்போலே
தலையண்டகோடிகள் தாங்குவாய்மேலே நீயே

4. திருநெய்செப்பில்லாத் தீபங்கள்போலே
பரிதிசந்திரமீன் பலசெய்தாலே நீயே

5. அண்டம்அகண்டம் அடங்காச்சரீரம்
தொண்டர்கள்மனமலர் சுமக்குமோபாரம் நீயே

6. பாரபூதங்கள்உன் பணிசெய்யுஞ்சரியே
சூரியன்உனதுடற் சோதிமுன்கரியே நீயே

7. யுகம்பலகோடிகள் உனக்கரைக்ஷணமே
நிகழுமுக்காலமும் நினக்குக்கிரகணமே நீயே

8. சகலர்க்கும்ஊட்டிநீ தானொன்றும்உண்ணாய்
நிகழ்பெருங்காவலால் நித்திரைபண்ணாய் நீயே

9. தினகரசந்திர தீபம்ஏற்றிடுவாய்
வனமுகிற்கடத்தால் மழையூற்றிடுவாய் நீயே

10. நடவாய்பறவாய் நாடெங்குமிருப்பாய்
உடலாய்உயிராய் உயர்வாய்பெருப்பாய் நீயே

11. மரங்களினுழைந்தே மலர்வாய்கிளைப்பாய்
கரங்களில்லாதே கருமங்கள்விளைப்பாய் நீயே

12. கண்ணுய்ப்பொருள்களைக் காட்டுவாய்பார்ப்பாய்
அண்ணுசகலமும் ஆட்டியேதீர்ப்பாய் நீயே

13. கனைகடல்உணதருட் கடலிலோர்திவலே
இனிவேதநாயகா எனக்கென்னகவலே நீயே

---

107. இராகம் - தோடி, ரூபக தாளம்.

பல்லவி

ஞானகுருபரவடிவே—அருமறையின்முடிவே ஞான

அநுபல்லவி

மோனசுகாசனசம்பிரம
முத்தியளித்திடும்—நித்தியபரப்பிரம ஞான

சரணங்கள்

1. பாமரனுனஎன் மீதுனக்குக்கிருபைஇல்லையா—எந்தன்
பாவந்தொலைத்தெனை ஆள்வதுனக்கொருமலையா
தாமதம்நீசெய்ய தேகம்எனக்கென்னநிலையா—நிதம்
தஞ்சம்பத—கஞ்சம்பிர-பஞ்சம்தரு-நெஞ்சத்தொலை ஞான

2. தீனகிருபாநிதி யென்றுபேர் கொண்டநீ அலவா—அருள்
செய்தெனை ஆள்வதினல் உனக்கியாதொருசெலவா
ஆனமலர்ப்பதம் அண்டுமநான்கிள்ளைநீ இலவா—புவி
அஞ்சும்புலன்-அஞ்சும்பகை-நெஞ்சம்செயும்-வஞ்சம்தொலை
ஞான

3. நின்மலநித்திய நிரஞ்சன நீதவினேதா—நாளும்
நிகிலசராசரம் யாவையுந்தாங்கும் பிரக்கியாதா
தன்மவிலாச சுகாநுபவானந்தநீதா—எனைச்
சாடும்வினை-வாடும்வழி-படும்பா-வீடுக்கொடு ஞான

4. நம்பும்அடியவர் துன்பம் அகற்றுங்குணளா—பவ
நாசமகேச பிரகாசவிலாசதயாளா
அம்புவியில்வேத நாயகன்போற்றும்பொற்றாளா—இங்கும்
அங்கும்புவி-எங்கும்புகழ்-தங்கும்பகி-ரங்கம்பெற ஞான

---

108. இராகம் - ஈசமனோகரி, ஏக தாளம்.

பல்லவி

மெய்யிது மெய்யிது மெய்யிது தேவே — மெய்

அநுபல்லவி

ஐயையோ என்செய்வேன் அருள்புரிகோவே — மெய்

சரணங்கள்

1. மலர்ந்துனைபோற்றாத வாயனும்நானே
கலந்துநின்பணிசெய்யாக் காயனும்நானே — மெய்

2. கண்டுநீர்பெருகாத கண்ணனும்நானே
அண்டும்பாவியர்க்கெல்லாம் அண்ணனும்நானே — மெய்

3. நிதம்உனை நினையாத நெஞ்சனும்நானே
மதங்கொண்டுதிரிகின்ற வஞ்சனும்நானே — மெய்

4. கனிந்துனைச்சேவியாக் கரத்தனும்நானே
தினம்தினம்வணங்காத சிரத்தனும்நானே — மெய்

5. கருதிஉன்புகழ்கேளாக் காதனும்நானே
சுருதியைமறுத்திடும் சூதனும்நானே — மெய்

6. கடுகஆலயம்செல்லாக் காலனும்நானே
முடுகியவினைக்கெல்லாம் மூலனும்நானே — மெய்

7. போதஅபேத புனிதநிஷ்கோபா
வேதநாயகன்தொழும் விமலசொரூபா — மெய்

---

109. இராகம் - சாமா, ரூபக தாளம்.

பல்லவி

பரப்பிரம்மமே திருவருள்—தாள்கிரமமே அநுதினமும் — பர

அநுபல்லவி

வரகுண சுகாநுபவ
சுரகண பூஜிதவைபவ — பர

சரணங்கள்

1. செய்வதெல்லாம் தீவினையே
தினையளவும் உனை நினையேன்
தெய்வமோகம் பினன்உனையே
தீர்த்தருள்வாய் துயர்தனையே — பர

2. அறியேன் மேற்குக் கிழக்கு
அன்புமில்லேன் நின் கழற்கு
சிறியேன்மேல் ஏன் வழக்கு
ஜெபதபத்தில் என்னைப் பழக்கு பா

3. பாழ்மனமோ வல் விரும்பு
பாவம்அதற் குக் கரும்பு
தாழ்வுறுநான் சிறு துரும்பு
சாமியென்மேல் மனந் திரும்பு பா

4 நினையேன் தர்மம் அதர்மம்
நிலமிசைநான் மூட ஜன்மம்
அனையே ஏதின்னம் வர்மம்
அகற்றிடுவாய் எனது கர்மம் பா

5. அகண்டபண்ட லாதி பத்திய
ஆதியந்த ரகித நித்திய
பிருந்தகருணா பரண சத்திய
வேதநாயகன் ஸ்துத்திய பா

---

110. இராகம் - பியாக், ஆதி தாளம்

பல்லவி

பாதம் நம்பினேனே—போதம் அருள்கோனே பாதம்

அநுபல்லவி

வேதமுதலோனே—மாதவர்பிரானே பாதம்

சரணங்கள்

1. ஆதரவுநீயே—ஐயனே என் தாயே
வாதமலநோயே மாற்றிஅருள்வாயே பாதம்

2. தீங்குகள் அநேகம்—செய்திடும் என் துரோகம்
நீங்கிடவிவேகம்—நீயருள் அமோகம் பாதம்

3. முத்தர்கள் சமுகனே—முக்கிய பிரமுகனே
உத்தமசுமுகனே—ஓவேத நாயகனே பாதம்

---

## 111. இராகம் - கனகவசந்தம், ஆதி தாளம்.

பல்லவி

நீயே துணை பரனே—துன்பம்
நீங்கிட அருள்வரனே — நீயே

அநுபல்லவி

மாயாதிமிரவி ஜயதினகரனே
தாயாகியசர்வ சாதகனே — நீயே

சரணங்கள்

1. அடியேன்செய்வதெல் லாம்அரும்பாபம்
கொடியன்மீது கொள்ளாதேகோபம் — நீயே

2. பண்ணேன்துதியே படியேன்விதியே
கண்ணேமணியே கதியேநிதியே — நீயே

3. உனையேநம்பிடில் உண்டோபயம்
அனையேவினைதீர்த் தருள்வாய்ஜெயமே — நீயே

4. மாதவம்உடையவர் மகிழ்மலரகிதா
வேதநாயகன்தொழும் விபுதர்கள்சகிதா — நீயே

---

## 112. இராகம் - பைரவி, திரிபுடை தாளம்.

பல்லவி

நாதாகன—வேதாதினம்—நீதா வரமே — நாதா

அநுபல்லவி

போதாசுக—தாதா அதி—கியாதாபிர—சாதாபுவி — நாதா

சரணங்கள்

1. நித்தியம்- அநித்திய—சுகத்தினை—மதித்திடு
பைத்தியம்—விடுத்தினிய—சத்தியம்—உதித்திடவே — நாதா

2. சுந்தர—மடந்தையர்கள்—சந்திர-முகந்தனை
நினைந்தெனது—சிந்தனைசெய்—தந்திரம்-ஒழிந்திடவே — நாதா

3. சொப்பனமே—ஒப்பனைகொள்—அற்பஉடலைப்பொருள்
எனப்பிரியம்—வைப்பதற—நற்பலன்—உறப்புவன — நாதா

4. மாதர்நிதி-பூதலமேல்-ஆதரம்உறுதபடி
சாதகப்பிர-போதமருள் வேதநாய-கன்புகழும் நாதா

---

113. இராகம் - நாதநாமக்கிரியை, ஆதி தாளம்.

பல்லவி

வேதநாயகனே—மெய்—மெய்—மெய்—மெய் வேத

அநுபல்லவி

பாதகம் செய்துழலும் பாழ்மதியே—ஐயன்
பாதங்கள் அன்றிநமக் கார்கதியே
பூதல வாழ்வினொடு புகழ்நிதியே—வெறும்
பொய்—பொய்—பொய்—பொய் வேத

சரணங்கள்

1. அத்தமி யாதொளிர் திவாகரனை—அதி
அற்புத மான சிவாகரனை
சித்த மிசைஒளிர் சுதாகரனைத்—துதி
செய்—செய்—செய்—செய் வேத

2. பூதலம் எங்கும் இசை போனவனை—அதி
புனிதனை உயிர்க்குயிர் ஆனவனை
மாதவர் காணுகின்ற மானவனை—உன்னுள்
வை—வை—வை—வை வேத

3. நாத பூதபௌதிக ஸ்தாபகனை—வேத
நாயகன் மீதிலென்றும் ஞாபகனை
ஓதரி தானசர்வ வியாபகனைப்—பணிந்
துய்—உய்—உய்—உய் வேத

---

114. இராகம் - கௌளிபந்து, ஆதி தாளம்.

பல்லவி

ஓ ஓ ஜெகநாதா—ஒருவரம் உதவிடல் ஆகாதா ஓ ஓ

அநுபல்லவி

தேவேதினம்பல பாவேபாடி என்
நாவே இனித்தேனே ஓ ஓ

சரணங்கள்

1. மனம் விஷப் பிரியம்—சகலமும்
 வாசா கைங்கரியம்
சினம் மதம் மாற்சரியம்—பூண்ட என்
 செய்கைகள் ஆச்சரியம்
இனமாகியபக்த ஜனமுடன்—ஐக்கியம்
 கனவினும் நீங்காமல் ஓ ஓ

2. பொய்யை மெய்யென நாடி—அநித்தியப்
 பொருள்களையே தேடி
வையகம் எங்கும் ஓடி—நான்செய்த
 வஞ்சகம் பலகோடி
மையற்கரிஇடர்கள் செய்யவே—தொடருதே
 ஐயோ கூகூகூ ஓ ஓ

3. நேசர் சிந்தா மணியே—அடியேன்
 நெஞ்சகம் பூண் அணியே
ஆசையில் வரும் பிணியே—தொலைத்துநல்
 அறமே விடப்பணியே
ஈசனேஉனைத்தொழும்—தாசன்வேதநாயகன்
 பாசவலை உறுமல் ஓ ஓ

---

## 115. இராகம் - தேசமுகாரி, ஆதி தாளம்.

பல்லவி

போதம் தர என்ன விவாதம்—எனக்கமல
போதம் தர என்ன விவாதம் போதம்

அநுபல்லவி

வேதம் உணர்ந்தொழுகும்
நீதம் உடையவர்க்குப்
பேதம் அறவற்பபிர
சாதம் அருள்தெய்வமே போதம்

சரணங்கள்

1 மோகம் பெருகியலென
கீதம் எனும் பெரும்பிர
வாகந் தனில் அழுந்தி
 ஆகம்மெலிந்தேன் ஐயா போதம்

2. நெஞ்சோர் புறம்புலன்கள்
அஞ்சோர் புறம்மின்னார் கண்
கஞ்சோர் புறம்வருத்தும்
வன்சோர் வெலாம் அகலப் போதம்

3. பெண்ணாசை யானும்வளர்
மண்ணாசை யாலும்நிதி
எண்ணாசை யாலும்மனம்
புண்ணாகி வாடினேனே போதம்

4. ஏதும் அறிவில்லாஎன்
மீது வர்மஞ்செய்தல்
நீகாது பரமபக்தர்
ஓதும் வேதநாயகா போதம்

---

## 116. இராகம் - கௌரிபந்து, ஆதி தாளம்.

பல்லவி

சருவேசா சரணம்-எனக்குன்-தாளே ஆபரணம் சரு

அநுபல்லவி

இரவும்பகலும் உனையேஅநு சரணம்
இசைந்திடச்செய்யிது நல்லபிரகரணம் சரு

சரணங்கள்

1. நீயேசெய்வதெல் லாம்உபகாரம்
நின்மேற்சொல்ல வுண்டோவிவகாரம்
நியேன் புரிந்திடும் பிழைகள் அபாரம்
தேவாசெய்இதற் கோர்பரிகாரம் சரு

2. புண்ணியம்செய்திலன் கடுகுப்பிரமாணம்
பொய்யனுன் ஆயினும் இதுபிரமாணம்
எண்ணிடில்எனக்கு மின்னார்விழிபாணம்
என்சரித்திரப்பெருங் கதாபுராணம் சரு

3. பேசுவதெல்லாம் வாசாஞானம்
பெரும்பாவியர்க்கெல்லாம் நான்பிதானம்
நேசாசகலமும் உனதாதீனம்
நீயருள்எனக்குக் கிருபாரசபானம் சரு

4. ஈமேல்தொடுக்கின்ற பாணப்பிரயோகம்
 எனைநீமுனிந்திடில் ஏதுநிர்வாகம்
மாமோகாகியில் மயங்கினேன் ஆகம்
 வரவேதநாயகா அருள்பரிபாகம் சரு

---

117. இராகம் - நாதநாமக்கிரியை, ரூபக தாளம்.

பல்லவி

சமயம்ஈதையா—நலம்எனக்—கமையலுதையா சம

அநுபல்லவி

அமரர்செய்தீவினைச்—சுமைதொலைத்ததெனை
அமலன் ஆக்கிடல் நேர்த்தி—ஒரு
சமமிலா அருட்பூர்த்தி—உறு
நிமலகாரண மூர்த்தி சம

சரணங்கள்

1. இன்னமும்தாமசமோ—வினைசுமந்
 திடஎன்னால்வசமோ—எனக்
கின்னல்சகசமோ—உனக்கருள்
 ஈயஅவசமோ
அன்னமென்னடை—மின்னல்நேரிடை
 கன்னியர்விழி இணையே—மனந்
தன்னில்பாய்ந்திடும் கணையே—இனி
 என்னசெய்வேன்நீ துணையே சம

2. கருணைகூறுயோ—எனதுளக்
 கவலைதீராயோ—இந்தத்
தருணம்வாராயோ—எளியேன்
 தன்முகம் பாராயோ
இரணியம்பெண்கள்—தரணிமீதந்தக்
 காரணமேவமெய்துறந்தேன்—கடல்
திரணம்போலெங்கும் பறந்தேன்—உந்தன்
 சரணபங்கயம் மறந்தேன் சம

3. மாயைநீக்காயோ—எனைமுகம்
 மலர்ந்துநோக்காயோ—வினைத்

நீயைபோக்காயோ—எனை அதி
சீலன் ஆக்காயோ
நீயலா தசகாயம்—ஏதினித்
தீயவர்பயங்கரனே—மல
னோய்அற அருள்வானே—வேத
நாயகன்தொழும்பரனே சம

---

118. இராகம் - இந்துஸ்தான்காப்பி, ஆதி தாளம்.

பல்லவி

வாவா—வாவா—என் இதயந்தனில்
வந்தேமலரடி தந்தே ஆண்டிட வா

அநுபல்லவி

சாவால்வருந்துமுன்—காவாகாத்திடில்
தாவா—பூவார்—ஜீவா—தேவா வா

சரணங்கள்

1 மின்னார்கள்விழிவலை தன்னால்தயங்கினேன்
உன்னாதரவில்லாமல்—பன்னாள் மயங்கினேன் வா

2. பொய்யானவாழ்வுதனை—மெய்யாகநம்பினேன்
ஐயாநின் அடிக்கன்பு—செய்யாமல்வெம்பினேன் வா

3. சிந்தாகுலங்கெட—விரைந்தாளில்தின்னையா
எந்தாயேநீயெனை—முனிந்தேகல்நன்மையா வா

4. வேதநாயகன்தொழும்—சீதமலர்பாதனே
ஆதவன்எனப்புவி—மீதில்வரும்நாதனே வா

---

119. இராகம் - இந்துஸ்தான்காப்பி, ஆதி தாளம்.

பல்லவி

இன்னமும்என்மீ துனக்கேன்பாரக்கு
நின்னருள்தந்தே யெனைநீகைதூக்கு இன்ன

அநுபல்லவி

பன்னரியபுவன மனோகரா
உன்னதப்பிரதாப கிருபாகரா இன்ன

சரணங்கள்

1. எதுங்கதியில்லா ஏழைநானே
   என்னசெய்யுஞ்சலம் நீங்குமீனே
   பாதவனஜமலரே நம்பினேனே
   பாகேஅமுதே பசுந்தேனே — இன்ன

2. காலெனும்காய சுகபோகம்நாடிக்
   கர்த்தனேசெய்தேன் வினைகோடிகோடி
   வேனில்வெயிலுற்ற புழுப்போலவாடி
   வேதனேவந்தேன் உந்தன்பாதந்தேடி — இன்ன

3. அண்டபகிரண்ட சர்வாதிகாரா
   அவ்வியக்தமய அசகாயசூரா
   தொண்டன்வேதநாயகன் மனோசஞ்சாரா
   தோஷபரிகார உதாரதீரா — இன்ன

---

120 இராகம் - சுருட்டி, சாப்பு தாளம்.

பல்லவி

இப்படிப்பட்டநான்—எப்படிஉன்முகத்தே
வந்துவிழிப்பேன் ஐயா — இப்

அநுபல்லவி

தப்பறியாதவர்—தமதறிவினைத்தூண்டும்
தாயேதந்தையேஎன்மேல்—நீயேஇரங்கவேண்டும் — இப்

சரணங்கள்

1. பாதாதிகேசபரியந்தமும்நான்விடம்
   பகலும்இரவும்மாயை பண்ணும்என்நெஞ்சில்நடம்
   ஏதம்அறஅந்நெஞ்சம் ஏகாயிடம்எவ்விடம்
   எனினும்உன்னிடம்வர வெனில்அதுமுழுமுடம் — இப்

2. கர்த்தனேஎன்மேல்அற்பக் காற்றடிக்கினும்போறேன்
   காசினியெல்லாங்கெட்டுக் கலக்கிலும்துயருறேன்
   எத்தனைபொருள்பிறர் எனக்கீந்திடினுமாறேன்
   ஏச்சிற்கையாலுங்காகம் ஓட்டிநான் இழிவறேன் — இப்

3. இமைமிசைநான்சமக் கிடுவது பழிச்சுமை
எனினும்பிறர்செய்யற்ப இடருக்கும்செய்யேன்க்ஷமை
மிக்அற்பர் தமைச்சேர்வ தல்லால்மேலவர்தமை
வேதநாயகனேநான் வேவிஅறியேன்இமை இப்

---

121. இராகம் - மோகனம், திரிபுடை தாளம்.

பல்லவி

எந்தவிதமும்உன்—கந்தமலர்ப்பதமே—அடியேன் அடைந்திடச்
சிந்தைமகிழ்ந்துநீ தந்தருள்வாயிதமே எந்த

அநுபல்லவி

அந்தமெங்கும்—அமர்சர்வசாக்ஷியே
வந்தனைசெய்பவர்—மானசக்காக்ஷியே எந்த

சரணங்கள்

1. சகசமானிடர் தமக்குப்பாவமே—பிழையாவும்பொறுத்துத்
தயைசெய்தாள் வனுநின்சுபாவமே
தகவேநின் சரித்திரப் பிரபாவமே—அனுதினமும்பாடிச்
சாதகம்பெற என்மனோபாவமே

தந்தைநீதானே—உனக்கொரு
மைந்தனும்நானே—இவ்வாறுநான்
சொந்தமானேனே—தரிசனம்
தந்தருள்கோனே—புவிதனில்

நிகரில்லாத நியாயப்பிரசித்தனே
சகலலோகசராசரகர்த்தனே எந்த

2. மணல்அன்னத்தில் கல்லாய்ந்திடும்வகையே—எனைச்சோதித்திடி
மனதில்உள்ளதெல்லாம் வினைத்தொகையே [ல்—என்
குணமும்உண்டோபுவி வாழ்வுவெறுப்புகையே—அதைவிரும்பு
குரங்கு ஐம்புலன்களும் செயும்பகையே [என்மனக்

கோதையர்மோகம்—தனில்வரும்
வாதைஅநேகம்—எவர்க்குமே
ஈதநுபோகம்—எனக்கினிப்
போதும்இப்போகம்—அநுதினம்

புணரும்ஆனந்த பொக்கிஷசாலையே
மணமிகுந்தருள் மலரும்சோலையே எந்த

3. தாதைபிள்ளையைத்தள்ளல் பாந்தமா—இதுகான்குபேரும்
சரியென்றொப்புக்கொள்ளும் சித்தாந்தமா
நாதனை எனை முனிதல் சாந்தமா—எனதுள இரும்பையென்
றுளும்இழுக்கும்விஷயம் காந்தமா—உன்னையேகதியென

நண்ணியசித்தர்—பெருந்தவம்
பண்ணியசுத்தர்—நிகரறு
பண்ணைய பத்தர்—முதலிய
எண்ணிலா முத்தர்—அடையுமுன்

பாதநிதிஅவர்க்கேபிதிராஸ்தியா
வேதநாயகன் பங்கென்னநாஸ்தியா எந்த

---

## 122. இராகம் - பைரவி, ஆதி தாளம்.

பல்லவி

ஏகாகனயோகா அனுதினம்—எனையாண்டருள்வாயே ஏகா

அநுபல்லவி

சேகரகுண திவ்ய தேஜோமயகாத்ர
பாகநித்தியானந்த பாக்கியபரமக்ஷேத்ர ஏக

சரணங்கள்

1. கண்டுநிகர்மொழியும்—வண்டுநிகர் விழியும்
தண்டுநிகர்புயமும்—கொண்டுமயக்குமந்தப்
பெண்டுபிள்ளைகட்குழைத்—துண்டுறங்கிநிதமும்
மண்டுவினையலாதுன்—தொண்டுசெய்தறிகிலேன் ஏகா

2. நாடேன்பெரியரொடு—கூடேன்புண்ணியந்தன்னில்
நீடேன்உனதருளைத்—தேடேன்உனதுபுகழ்
பாடேன்அநுதினங்கொண்—டாடேன்பதமலரைச்
சூடேன்அருவினைச்—சாடேன்சுரர்புகழும் ஏகா

3. நாதாதிவ்யவரப்பிர—சாதாஅகண்டசமு
தீதா நினைவினுக்—கதீதாஅடியர்கள்
சமேதாநிலைகொள்பஞ்ச—பூதாதிரிகர்ம
விநோதாதினந்தினமும்-வேதநாயகன்புகழ் ஏகா

123 இராகம் - மோகனம், ரூபக தாளம்.

பல்லவி

இன்னம் பராமுகமாமோ—வினை
நின்னருள் தானின்றிப்போமோ இன்

அநுபல்லவி

மின்னல்உறுபுகழ் நன்னலமேவிய
வேதார்த்த—கன—போதார்த்த—ஓ இன்

சரணங்கள்

1. வன்பிழைஒப்புக்கொண்டாலே—க்ஷமை
மன்னர்செய்வார்புவிமேலே
என்பிழையைப்பலகாலே—ஒப்பி
னேனே முனிவே தென்பாலே
அன்பெனும்தெப்பம் இல்லாமல்வினைக்கடல்
ஆழ்ந்தேனே—துயர்—சூழ்ந்தேனே—ஓ இன்

2. தன்பதியைப்பகையோரே—கொள்ளத்
தான்பார்த்திருப்பவன்யாரே
நின்பதிஎன்மதிதேரே—அதில்
நீங்காமல்உன் கண்முன்நேரே
உன்பகையோரேனும் காமக்குரோதாதிகள்
உற்றாரே—ஜெயம்—பெற்றாரே—ஓ இன்

3. நெஞ்சங்கவலைக்குவீடா—ஐயா
நின்சோதனைக்குநான்ஈடா
அஞ்சாதேநீ இங்குவாடா—என்
றருளாதின்னம் வேறுபாடா
கஞ்சமெனவேத நாயகன்போற்றிடும்
தாதாவே—பெற்ற—மாதாவே—ஓ இன்

---

124. இராகம் - உசேனி, திரிபுடை தாளம்.

பல்லவி

ஏகநாதா—அரும்பரா—போகம் நீதா ஏக

அநுபல்லவி

பாகவிகசித கற்பகாரண்ணிய
பதிதபாவன பரமகாருண்ணிய ஏக

தேகம்நிறைஅதி ரூபலாவண்ணிய
தீயர்தமைச்சிக்ஷை செயும்நிர்த்தாக்ஷண்ணிய — ஏக

சரணங்கள்

1. நாளுமூழ்கினன் பாபஅங்கணம்
நாடேன்பெரியோர்கள்வங்கணம்
ஆளும்படிகரித் தனைநீகங்கணம்
அன்போடெனைச்சேர் நல்லோர்கள்தங்கணம்

நீளும்அகண்டித மாகியோங்கிய
மாளுந்தொழிலறு மாசுநீங்கிய — ஏக

2. அடியன்மீதுனக் கென்னபிணக்கமே
அகற்றுவாயென தகங்கொள்உணக்கமே
நெடியநின்பத மலர்க்குவணக்கமே
நிதமும்நான்செய்ய அருள்நல்லிணக்கமே

கடியதுயர்க்கடல் கடக்கஉனைதிணை
அடியலாதினி அயலுண்டோபுணை — ஏக

3. உதிக்கும்பலகதிர் நிகரும்விதானே
உயர்நித்தியானந்த நகரச்சதானே
துதிக்கத்துதிக்கவே இனிக்கும்மதுரனே
சூழும்சிவாசார கிகள்தம்பிதிரனே

குதிக்கும்மாயையைக் கொன்றுதாழ்விக்கும்
மதிக்குப்வேதநா யகனைவாழ்விக்கும் — ஏக

---

125. இராகம் - புன்னாகவராளி, ரூபக தாளம்.

பல்லவி

தயைபுரியே—எனதுளத்—துயர்பிரியே — தயை

அநுபல்லவி

உயரும்தர்ம சம்வர்த்தனை
உத்தமர்தம்மனநிர்த்தனை
கயவர்இழி குலமர்த்தனை
கருதரும்புண்ணிய பத்தனை — தயை

சரணங்கள்

1. புண்ணியனாயேனுக்கெட்டி
பொய்களெல்லாம் வெல்லக்கட்டி
திண்ணிய மெய்ஞ்ஞான திட்டி
சித்தியில் என்னை நட்டி

சின்மயமே—மெய்வேத—நன்மயமே—எனையுரு
திண்மையைப்பழியோட—நன்மைப்பலன்நீட
உண்மெய்ப்பதம்நாட—கன்மப்பயிர்வாட — தயை

2. என்குறைபாராட்டாதே
இன்னம்என்னை வாட்டாதே
நின்கோபங் காட்டாதே
நிபங்கள்என்மேற் சாட்டாதே

நிச்சயம் நிலைபெறும்—அக்ஷயமே—கணமுறு
நேசத்திடம்ஓங்க—பாசத்திடம்நீங்க
மாசற்றறம்வீங்க—வாசத்தைதாங்க — தயை

3. அண்டசராசரரூபா
அகதிகளுக்கனுதாபா
விண்டலமண்டலபூபா
வேதநாயகன் லாபா

விண்மணியே எனதிரு—கண்மணியே—பழிசெயும்
வேகப்பவமோட்டி—மோகப்பகைவிட்டி
பாகப்பதம்நீட்டி—யோகப்பதிகாட்டி. — தயை

---

## 126. இராகம் - ஜங்கலா ரூபக தாளம்.

பல்லவி

நல்லவரந்தாருவாய்
நாதனே அபேதனே — நல்ல

அநுபல்லவி

அல்லும்பகலும் உன்னைநாட
அற்புதபரமார்த்தந்தேட — நல்ல

சரணங்கள்

1. அன்பருடனேகூடவும்—அனுதினம்துதிபாடவும்
இன்பருடனேஆடவும்—ஈனரைக்கண்டோடவும் — நல்ல

2. பஞ்சப்புலனை அடக்கவும்—பாவக்கடலைக்கடக்கவும்
நெஞ்சம்ஒடுங்கிக்கிடக்கவும்—நீதிநெறியில்நடக்கவும் நல்ல

3. தீனர்களையேதாங்கவும்—சிந்தைத்துயரம்நீங்கவும்
ஞானவழியில்ஓங்கவும்—நானுன் அடியில்தூங்கவும் நல்ல

4. பத்தர்பாவுந்தேனே—பரமதிவ்யசுபாவனே
வித்தகமனோபாவனே—வேதநாயகன்ஜீவனே நல்ல

---

## 127. இராகம் - பூரணச்சந்திரிகை, ஆதி தாளம்.

பல்லவி

இன்னம்தான் பாராமுகமோ—இது தகுமோ ஸ்வாமி இன்னம்

அநுபல்லவி

சந்நிதான தரிசனம் அருளாமல் இன்னம்

சரணங்கள்

1. செந்தாமரைப்பதமே—சேரேன்நானிகமே
நொந்தேன்பலவிதமே—நோய்தீர்த்தருள்ஹிதமே

சிந்தைதனில் பிரேமைகொண்டேன்
தீமைகள்செய்து மைகண்டேன்
சந்ததமும் நலம்விண்டேன்
சர்ஜ்ஜனசங்கமும் அண்டேன் இன்னம்

2. பூண்டேன்அபசரிதம்—புகழேநின்சரிதம்
ஆண்டோய்என் துரியம்—அறவேசெய்துரிதம்

நீண்டபெருந்தகை பூணேன்
நீதிதனையுமே பேணேன்
மூண்டபெரும்பழி நாணேன்
முத்திபெறும் வழிகாணேன் இன்னம்

3. அடியார்திரவியமே—அமலோதயஸ்வயமே
வடிவார்ஆலயமே—வளர்தேஜோமயமே

திடமுறு புலனுதாரா
தினகர கோடிசரீரா
விடயமுறு அதிகாரா
வேதநாயகன் உபகாரா இன்னம்

---

128. இராகம் - பிலகரி, ரூபக தாளம்.

பல்லவி

கருணாலயநிதியே—தினமும்உன்
சரணாம்புயம் கதியே — கருணா

அநுபல்லவி

சருவபேத விநோதகாரண
பரமசாதக பவநிவாரண — கருணா

சரணங்கள்

1. நிதம்வெளுக்க வெளுக்கவெண் தூசு
நிமிஷந்தோறும் நிறையுமோ மாசு
அதுபோலஎந்தன் அகமுறும்ஆசு
அகலவேஉன் அருள்ஒளிவீசு

அகிலகோடி விசாலகற்பித
சகலஜீவ தயாள அற்புத — கருணா

2 இங்கென்செய்கைகள் யாவும்நிகிர்ஷ்டம்
எனக்குப்புண்ணியம் என்றும்அநிஷ்டம்
பங்கம்தீர்க்கில் உனக்குண்டோகஷ்டம்
பரமனேஅருளா யோஉத்ரிஷ்டம் — கருணா

பாரமாகவே பண்ணும்பாதகம்
தீரவேநீ செய்கைசாதகம்

3. அமலபாஸ்கர கோடிசொரூபா
அகண்டசச்சிதா னந்தபிரதாபா
நிமலவேத வேதாந்தநிரூபா
நிர்விகற்ப நிரஞ்சனதீபா

நீதபூரண நிலயமஞ்சிதா
வேதநாயகன் இதயரஞ்சித — கருணா

———

129. இராகம் - அமிர்த கல்யாணி, ரூபக தாளம்.

பல்லவி

நாதாகிடையாதா வரமே—ஜெக—நாதா

அநுபல்லவி

பாதாரவிந்தம்நம்பும் பாவியைமேதாவியாக்க — நாதா

சரணங்கள்

1. எந்நாளும்மூடவிர்த்தி-இல்லையேதிரிகரணசுத்தி
மந்தமானஎன்துர்ப்புத்தி-மாறவேஅருளாட்யோசித்தி நாத

2. அகமெனும்மதயானைஎன்வசம்-ஆகவேஅருள்ஞான அங்குசம்
சுகதுக்காதிகளில்சமரசம்—தோன்றவேஅருள்வாய்தயாரசம்

3. அபயவாத கரநிர்வாக-ஆபத்பாந்தவஅருட்பிரவாக
விபவசார்வபௌமயோக-வேதநாயகன்ஸ்வாநுபோக நாத

---

## 130. இராகம் - அபூர்வம், ஏக தாளம்.

பல்லவி

சருவவினோதா—திருவருள் தாதா சருவ

அநுபல்லவி

இரவுபகல்உன திணையடிநாடவும்
தருமநிர்மலசுக சாகரம்ஆடவும் சருவ

சரணங்கள்

1. பசிதாகசோகரோக பாபசரீரம்
தசிவுருமலஜல காமபண்டாரம்
சுசிஅறும்இதில்வினை தோஷம்அபாரம்
நிசமயனே அருள்நீ பரிகாரம் சருவ

2. கடல்நடுவேகரை காணுதகாகம்
இடர்உறல்போலவே எனதுநிர்வாகம்
மடம்அறஅருள்செய் நிர்மலபரிபாகம்
கடவுளைநாடினேன் கருணைப்பிரவாகம் சருவ

3. சுரகணசேவித துரிதவினாசன
சருவதயாபர சாபவிமோசன
கருமநிவாரண கருணாவிலோசன
வரவேதநாயகன் மனகமலாசன சருவ

---

## 131. இராகம் - சரசாங்கி, ரூபக தாளம்.

பல்லவி

எத்தனைகவிபாடினும் பலன்ஏதுமில்லையே எத்தனை

அநுபல்லவி

சித்தம்வாக்குக்கிரியை — அத்தனையும்தினம்
உத்தமமார்க்கத்தில்—ஒத்துநில்லாமல் எத்தனை

சரணங்கள்

1. சந்ததமும்பரன்—சுந்தரபாதத்தை
அந்தரங்கம்தனில்—சிந்தனைசெய்யாமல் எத்தனை

2. மோசம்செய்யும்ஆசா- பாசங்களென்னும்
பிசாசந்தனைச்சர்வ—நாசஞ்செய்யாமல் எத்தனை

3. கோபம்பொறாமைபொய்—லோபம்மதமுதற்
பாபங்கட்கேமனஸ்—தாபங்கொள்ளாமல் எத்தனை

4. மும்மலபாசத்தை—நிர்மூலமேசெய்து
நிர்மலசித்தனை—தர்மஞ்செய்யாமல் எத்தனை

5. தாயகனும்வேத—நாயகன்தீனர்
சகாயன்தனைநெஞ்சுள்—நேயம்பண்ணுமல் எத்தனை

---

132. இராகம் - ஹம்சத்தொனி, ஆதி தாளம்.

பல்லவி

ஞானோதயவரம் அருளே ஞானே

அநுபல்லவி

பானோதய பரம்பொருளே ஞானே

சரணங்கள்

1. மாயாவிகாரஜெகமே தோயாமல்அருள்சுகமே
தூயர்நேசனே—ஸ்வயம்பிரகாசனே
தீயர்நாசனே—சித்விலாசனே ஞானே

2. தேகாபிமானம்அறவே யோகாநுசாரம்உறவே
பாகம்நீட்டுவாய்—பாதம்நாட்டுவாய்
மோகம்ஓட்டுவாய்—முத்திகாட்டுவாய் ஞானே

3. ஆதாரம்வேறுமிலையே பாதாரவிந்தம்நிலையே
போததாயகா—புண்ணியஆயகா
வேதநாயகா—விமலதூயகா ஞானே

---

133. இராகம் - தீரசங்கராபரணம், ரூபக தாளம்.

பல்லவி

ஆதிமூலனே—நீதி நூலனே—நித்ய ஆதி

அநுபல்லவி

வேதபோத சாதகம்பெற—நீதயைபுரிவாய்—நித்ய ஆதி

சரணங்கள்

1. திட்டமாகமாயைக்கே அஷ்டதிக்குப்விஜயமா-நான்
துஷ்டன்ஆதலால்உனக்கும் எனக்கிட்டவரப்பயமா
கெட்ட இதயமே—அதில்—கஷ்டம்உதயமே
சிஷ்டரோடெணைக்கூட்டிஞான—நிஷ்டன் ஆக்குவாய்—நித்ய ஆதி

2. துணைவுன்பாத இணையலாது சொல்லவேறுண்டோ
இணையிலாயொரு திணையிலாய்தெய்வம் எனக்குத்தான் இரண்
குணம்தருவாயே—அருள்—மணம்தருவாயே [டோ
உணரொண்ணாத நினதுசேவை-புணரவேஅருள்வாய்-நித்ய ஆதி

3. மனையைச்சுத்தஞ் செய்தினிதுறல் மனிதர்க்கும் சகசமே
நினதகமெனும்எனதுநெஞ்சம நிதமலவசமே
புனிதம்செய்வாயே—அதில—இனிதமர்வாயே
தநயன்வேதநாயகனுக்குன்- தரிசனமருள்வாய்—நித்ய ஆதி

———

134. இராகம் - பியாகு, ரூபக தாளம்.

பல்லவி

பிக்ஷை அருளாயோ—ஞான பிக்ஷை

அநுபல்லவி

அக்ஷயநிர்மல—லக்ஷணனேஜீவ
ரக்ஷணனே அதி—பக்ஷமுடன் ஞான பிக்ஷை

சரணங்கள்

1. சத்தியமாருத—புத்தியும்ஓயாத
பத்தியும்மெய்ஞ்ஞான—சித்தியுமுத்தியும் பிக்ஷை

2. நேசருடன்சக—வாசமும்ஞானப்பிர
காசமும்உன்விசு வாசமும்நேசமும் பிக்ஷை

3. தானம்பொறைஅருள்—மானம்இதராபி
மானம்விதானமும் மோனமுந்தியானமும் பிசைக்ஷ

4. பூதலமல்லாம்—விபரீதம்உறுமலே
ஆதரவுசெய்யும்—வேதநாயகனே பிசைக்ஷ

---

135. இராகம் - சௌராஷ்டிரம், சாப்பு தாளம்.

பல்லவி

இந்தமனம் கெட்டதையா
பந்தவலைப் பட்டதையா இந்த

அநுபல்லவி

சந்ததம் புண்ணியந்திரண்ட
சுந்தரதேகா நான்கொண்ட இந்த

சரணங்கள்

1. சொன்னபடி கேளாச்சண்டி
தோஷமூட்டை தூக்கும்பண்டி
உன்னிடம் வரவேநொண்டி
ஓடும்விஷயத்தை அண்டி இந்த

2. இதரர்வாழக் கண்டால்வாட்டம்
எவருங்கெட்டாலோ கொண்டாட்டம்
மதனநெருப்புக்குக் காஷ்டம்
வாயுவினும் வேகம்ஓட்டம் இந்த

3. சுகதுக்கபேதம் போதிக்கும்
சூழ்நலமெல்லாம் பேதிக்கும்
பகல்இரவென்று சாதிக்கும்
படுவிஷம்உண்டு சோதிக்கும் இந்த

4. காடுங்கரையும் சஞ்சாரம்
காமப்பசாசுக் காகாரம்
நாடும்பிரபஞ்ச வியாபாரம்
ஞானம்இதற் கெட்டாத்தூரம் இந்த

5. பாதகங்கட் கெல்லாங்குரு
பாசம்வினை விக்கும்எரு
எதுவில்லா விஷதரு
எனக்கனுகூல சத்துரு — இந்த

6. பஞ்சபூதாதி நிர்மாணு
பக்தர்கள் இதயவாணு
விஞ்சையாம் சாஸ்திரபுராணு
வேதநாயகப் பிரமாணு — இந்த

---

### 136. இராகம் - மனோகரம், திரிபுடை தாளம்.

பல்லவி

எந்தையே உனக்கும் அடியேனுக்கும்
எத்தனை பேதம் ஐயா — எந்தை

அநுபல்லவி

சந்ததசர்வ சாம்பிராஜ்ய பிரபுத்துவ
சாசுவத தேவதேவ மகத்துவ — எந்தை

சரணங்கள்

1. தேவனீசகல புவனேசன்
சிறியனுன்உந்தன் தாசானுதாசன்
காவலனுனீ ஸ்வயம்பிரகாசன்
கசடன்நான் அந்தகாரப்பிரவேசன் — எந்தை

2. சத்தியமாகநீ தர்மசொரூபி
தாரணிமீதிலே நான் பெரும்பாவி
நித்தியனுனீ சுத்தஅரூபி
நிச்சயமாகநான் மெத்தக்குரூபி — எந்தை

3. சமமில்லாத நீயேமலரகிதன்
சாமிநான்உலகில் மலசகிதன்
விமலனேநீபல பிராணிகள்விகிதன்
வேதநாயகனேநான் எவர்க்குமேஅகிதன் — எந்தை

# காலை ஸ்தோத்திரம்



## 137. இராகம் - தேசிகதோடி, ஆதி தாளம்.

பல்லவி

உனக்கே—நமஸ்காரமையா—இடர்
ஒன்றும்வாராமலே நன்றுசெய்தாயே — உனக்கே

அநுபல்லவி

தனக்கோர்நிகர் என்றுமிலாத
தயாகருண பராபரனே — உனக்கே

சரணங்கள்

1. நேத்திரங்களைநீயெம்—மாத்திரமூடாமற்
காத்திருந்தாயென்னை—இராத்திரிமுழுதும் — உனக்கே

2. சத்துருபயமின்றி—நித்திரைசெயவென்னைப்
பத்திரமாயுன்கையில் வைத்திருந்தாயே — உனக்கே

3. முந்தும்அரவம்விஷ—ஜெந்துக்களால்அபாயம்
வந்துகெடாமலே—காபந்துசெய்தாயே — உனக்கே

4. தீயும்வெள்ளமும்காற்றும்—பேயும்விலங்கும்பல
நோயும்வாராமற்காத்தாய்—தாயுந்தந்தையும்போல — உனக்கே

5. நாங்களோர்தடையின்றித்—தூங்கஇராமுழுதும்
வீங்கிருட்போர்வைதனைத்—தாங்கிநின்றாயே — உனக்கே

6. இருட்மொழிவிடியும்—பொருட்டீபுவிதனை
உருட்டிஇராமுழுதும்—புரட்டிநொந்தாயே — உனக்கே

7. பூதநாயகனேபிர—போதநாயகனேசங்
கீதநாயகனேநல்—வேதநாயகனே — உனக்கே



## 138. இராகம் - தோடி, ஆதி தாளம்.

### பல்லவி

ஆளாயோ எனையே—நம்பினேன் நெடு
நாளாக உனையே ஆளா

### அநுபல்லவி

நீளும்புவனாகாரா—நேயருக்குபகாரா
நிகராறும்—இகபர—சுகமருள்—வரதா
அகம்அறு—சுகுணர்கள்—புகழ்அரு—வரதா ஆளா

### சரணங்கள்

1. எத்தனைபதங்களுக் கெடுப்பேன்கற்பனைநிதம்
எல்லாஞ்செலவாய்ப்பாட்டுக் கினிமேல்இலைஆஸ்பதம்
அத்தனே இரங்கிநீ அருள்வாய்பரமபதம்
அன்றேற்பழம்பாட்டன்றி அறியேனுன்புதுப்பதம்
அல்லல்வினையகல நல்லவரந்தந்தெனை ஆளுவாய்—அஃ°
தல்லவெனிற்பதங்கள் சொல்லநல்வாக்குதவி மூளுவாய்கன
அகணித—சுகுணபிர—முகபரமேசா
ஜெகமயில்—அகமலமெய்—திகழ்உபதேசா ஆளா

2. கனியினல்மரத்துக்குப் பலனுண்டோ அதுபோலே
காசினிமீதடியேன் பேசினநீதிநூலே
இனியபயன்பிறருக் கீயினும்அதனாலே
எள்ளளவுநலந்தான் எனக்குண்டோபுவிமேலே
இலக்கஅந்நூலின்மிசை விலக்கியதூர்க்குணங்கள்யாவுமே
—வெரு
கலக்கமுறஎன்மனமலர்க்கண் அநுதினமேவுமே—எந்தன்
இதய—மதமயலை—முதல்அறநீக்கி
நிதம்நிதம்—உனதிரு—பதமலர்தேக்கி ஆளா

3. ஓங்ககிலாண்டகோடி தாங்கிடும்பரிசன்னியா
உத்தமமூர்த்திகர சுத்தபிரமசைதன்னியா
நீங்கருமாமகிமை வீங்கிவளர்சௌஜன்னியா
நித்தமுந்துதிபுரி பக்தர்நமக்கன்னியோன்னியா
நீதிநெறிவிலகு பாதகம் அற அறநேட்டுவாய்—பெருங்
கோதகல்இகபர சாதகஞானநிலைகாட்டுவாய்—அரு
நீதிபர—கதியெனும்—விதிஉபதேசா
துதிசெய்வேதநாயகன்—மதிஅமர்நேசா ஆளா

———

## ஈஸ்வர வருடத்துப் பஞ்சத்தைப்பற்றிப் பாடியது



139. இராகம் - உசேனி திசிரஜாதி, மட்டிய தாளம்.

பல்லவி

பஞ்சம்தீர் ஐயா—உனையன்றித்
தஞ்சம் ஆர்—ஐயா பஞ்சம்

அநுபல்லவி

வஞ்சகமேகம் உலோபர்கள்போலே
மண்ணில்மழை பொழியாமையினாலே
சஞ்சலமாகித் தளர்ந்தோ மேன்மேலே
சாமி கதிஉந்தன் தாமரைக்காலே பஞ்சம்

சரணங்கள்

1. எட்டுநாள் பத்துநாள் பட்டினியோடே
இடையிலே கந்தை இருகையில் ஓடே
ஒட்டி உலர்ந்தஉடல் என்புக்கூடே
ஒருகோடிபேர்கள் வசிப்பதுகாடே
ஊரும் இல்லாமல்—குடிக்கத் தண்
ணீரும் இல்லாமல்—அன்னமெனும்
பேரும்இல்லாமல்—பசிதீர்க்க
ஆரும் இல்லாமல்
பாரில் அநேகர் பரதேசி ஆனாரே
ஊரில் அநேகர் உயிர்மாண்டு போனாரே பஞ்சம்

2. தாரங்களையே புருஷர் கைவிட்டார்
தந்தைதாய் பிள்ளைகளை விலையிட்டார்
வேரும்இலையுங் கிழங்கும் சாப்பிட்டார்
வெறுங்கையராய் வெளியே புறப்பட்டார்
வேலியும் அற்றார்—பெண்சாதிகள்
தாலியும் விற்றார்—வேலைசெய்து
கூலியும் பற்றார்—பலபல
சோலிகள் உற்றார்
தோலுமெலும்புமாய்த் தோன்றியேசோம்பினார்
பாலருந்தாய்முலைப் பால் அற்றுத்தேம்பினார் பஞ்சம்

3. பஞ்சம் இதுபோலக் கண்டதில்லையே
பலபேர் அடுப்பில் வையார்கள் உலையே
நஞ்சம்போல் நாட்குநாள் ஏறும் விலையே
நாங்கள் படுந்துன்பம் நாறாறுமலையே
நரர்கள் மெய்வாடி—மனமிக
உருகித் தள்ளாடிக்—கண்ணீர் ஆறாய்ப்
பெருகியே ஓடிப்—பிக்ஷை கேட்க
வருபவர் கோடி.
இரவுபகல் எங்கும் ஏழைகள் சத்தமே
பரனே கலியொடு பண்ணினர் யுத்தமே — பஞ்சம்

4. ஏரிகுளம் நதியாவும் நீர்சுண்ட
ஏகமாய்க் கோடைக்கனல் எங்குமண்ட
சேரி மாடாடுகள் செத்துப்போய்வெண்ட
ஜெகமுழுதும் உதராக்கினி அண்ட
தீனர்கள்நாட—அவர்களை
ஈனர்கள்ஜாட—தங்கள் கத
வானதை மூட—அதுகண்டு
மானிகள் வாட
மேனி குலைந்து மெலிந்தாரே இப்படி
கோன் உனையன்றிக் குடியாவதெப்படி — பஞ்சம்

5. மண்ணில் அனேகர் என் கண்ணின்முன் மாய்ந்தார்
மரஞ்செடி புல்லையும் மாடுபோல் மேய்ந்தார்
எண்ணில்லாப் பேர்கள் சருகுபோற் காய்ந்தார்
இளைத்துக் களைத்துத் தவித்துடன் ஓய்ந்தார்
ஏங்கிடுவாரும்—களைகொண்டு
தூங்கிடுவாரும் அன்னம்உண்ண
வாங்கிடுவாரும்—உடன்உயிர்
நீங்கிடுவாரும்
ஈங்கித்த வண்ணம் இருண்டது மேதினி
தாங்கும் வேதநாயகா தஞ்சம் ஏதினி — பஞ்சம்

———

# இதோபதேசக் கீர்த்தனைகள்

## கடவுளைத் தியானிக்கும்படி வற்புறுத்தல்

140. இராகம் - குந்தளவராளி, ஆதி தாளம்.

பல்லவி

மனமேநீ—ஈசநாமத்தை வாழ்த்துவாய்—தினம்
வாழ்த்துவாய் — மனமே

அநுபல்லவி

அனவரதமும்நீ அரும்பதம்பாடிக்
கனசுகமேவிடக் கலந்துகொண்டாடி — மனமே

சரணங்கள்

1. வம்புவார்த்தைகளேபெரும்பாபம்
வாய்க்குச்சேதமல்லால் என்னலாபம்
எம்பிரான்திரு மகிமைப்பிரதாபம்
எடுத்துப்பேசுவது சத்காலக்ஷேபம் — மனமே

2. ஏகமாகவுள் ளுருகியேபரிய
இருகண்ணானந்த பாஷ்பங்கள்சொரிய
தேகபரவசம் தாயன்புவிரிய
சிரகாதிகள் அஞ்சலிபுரிய — மனமே

3. கரும்புத்தின்னக்கை கூலியும்வேணோ
கற்கண்டோ அமுதோ பசுந்தேனோ
விரும்பும்பிரமானந்த மேயதுதானோ
வேதநாயகன்பேர்க் கிணைசொல்லநானோ — மனமே

---

## இதுவும் அது

141. இராகம் - அடாணா, ஆதி தாளம்.

பல்லவி

மனமேநீ மறவாதே—ஐயன்பதத்தை — மன

அநுபல்லவி

கனவிலும்—நிதமும்—நனவிலும்பலபல
வினைவிலும்—ஒழியாமல்—அனவரதமுமே — மன

சரணங்கள்

1. மண்ணுஞ்சராசரமும் விண்ணும்படைத்தளித்தழிக்கும் பராபரன்தன்
வண்ணமலர்பதத்தைக் காணும்பொழுதில் இன்பந்தேக்கும் ஆகையினாலே

உண்ணும் பொழுதும்வேலை-பண்ணும்பொழுதும்ஒன்றை
எண்ணும் பொழுதுந்துன்பம்-நண்ணும்பொழுதுமே மன

2. கல்லும் பெருமரமும் புல்லும்புனமுமே சஞ்சாரம் செய்யு மந்திபோல்
தில்லும்புல்லும் திரியா வரமுஞ்செய்தென்னசாரம் வெளியிலேதான்

செல்லும் பொழுதும்வார்த்தை-சொல்லும்பொழுதும்பகை
வெல்லும் பொழுதும்பின்னும்-அல்லும்பகலுமே மன

3. அஷ்ட திசையும்ஓடிக் கெட்டலைந்தோம்புவோம்சரீரம் இருப்பிடத்தை
விட்டகலாமல்தியான நிஷ்டை செய்வதில்என்னபாரம் பலவியாதி

குஷ்டம்வந்தாலுந்துரைப்-பட்டம்வந்தாலுமேபெருக்
கஷ்டம்வந்தாலும்பிறர்-வெட்ட வந்தாலுமே மன

4. கெடுக்கும்பலவினையை ஒடுக்கும்வேத நாயகநாமம் துயர்வாராமல்
படுக்கும்இகபரமும் கொடுக்குந்தினமும் உண்டுக்ஷேமம் சித்திரைசெய்யப்

படுக்கும்பொழுதுந்துகில்-உடுக்கும்பொழுதும் ஒன்றைத்
தொடுக்கும் பொழுதும்சுகம்-அடுக்கும்பொழுதுமே மன

---

## இதுவும் அது

### 142. இராகம் - கல்யாணி, ஆதி தாளம்.

பல்லவி

இனியாகிலுமனமே—ஐயனை நீ—நினையாயோ தினமே
இகபரசித்திபெறவே இனி

அநுபல்லவி

தனியிளம் பருவமும் தாண்டிப்போனதுமே
பனைபோல் வளர்ந்து கிழப் பருவ மானதுமே இனி

சரணங்கள்

1. ஆசைக்கொரு கறுப்பு மயிரேனும் இல்லையே
ஐயையோ கொக்குப் போல் நரைத்தது தலையே
காசுக்குதவாக் கிழமென்பது நிலையே
கன்னியர்க்கும் இனிநாம் கசக்கும்வேப்பிலையே — இனி

2. கண்கள் இரண்டும் மூக்குக்கண்ணாடி தேடும்
காலூசலாடும் வேர்வழியைக் கைநாடும்
தண்கொள்ளும் வேரற்றுத் தந்தங்கள் ஆடும்
தடுத்தாலும் நில்லாமல் யௌவனம் ஓடும — இனி

3. பசிவந்தபின் நெல்லை விதைப்பதும் மதியோ
படுந்தாகம் வந்தபின் வெட்டுதல் நதியோ
விசயஞ்செய்திடச் சாருங்காலமே தகியோ
வீணையுனக்குக் கெட்டுபோகச் சம்மதியோ — இனி

4. காலந்தனக் கென்னசெய்தோம் அபசாரம்
கணத்த ஆயுசை அநுதினம்செய்யும் சோரம்
மேலுமேமேலும் உடலில் விளைக்கும் விகாரம்
வேதநாயகன் சொல்லே வேதாந்தசாரம் — இனி

---

## துர்க்குணங்களை வெளியிடல்



143. இராகம் - எதுகுலகாம்போதி, ஆதி தாளம்.

பல்லவி

நெஞ்சே இந்த நாடெங்குந்தேடினும்
நீசர் நமைப்போலுண்டோ — நெஞ்சே

அநுபல்லவி

அஞ்சாமல்நாளும் அகந்தைகள் நீடுவோம்
சஞ்சலப்பேயால் தலைசுற்றிஆடுவோம் — நெஞ்சே

சரணங்கள்

1. தேகம்உயிர்முதல் யாவையுமேதந்த
தேவன்தனை மறப்போம்—கரு

மேகநிழல்போல் மறையும்பொய்வாழ்வை
விரும்பிநலந் துறப்போம்
மோகவிகாரத்திலே தடுமாறுவோம்
முன்னென்றும்பின்னென்று மாகப்பொய்கூறுவோம்
ஏகமாய்எங்கும் பிறர்களைத்தூறுவோம்
எப்படிஐயையோ நாம்கரைஏறுவோம் நெஞ்சே

2. கோவில்குருக்கள் ஜெபதபம்யாவும்
கொடுவிஷம் போல்வெறுப்போம்—தினம்
நேயமதாகவே தூயமறைசொல்லும்
நீதிகளை மறுப்போம்
ஆயிரம்பாவம் அடிக்கடிபண்ணுவோம்
அன்னியமாதரை ஆசையாய்எண்ணுவோம்
ஈயாஉலோப குணத்தையேநண்ணுவோம்
ஏழைபசியோ டிருக்கநாமுண்ணுவோம் நெஞ்சே

3. உள்ளபடிநமக் கெள்ளளவென்கிலும்
உத்தமம்தான்இலையே—பாவ
வெள்ளம்நிறைந்திடும் பள்ளந்தனிலே
விழுந்துகெட்டோம் நிலையே
வள்ளலைப்போல்வெறு மாயக்கூத்தாடுவோம்
வந்த எளியர்க்கு வாசலைமூடுவோம்
உள்ளேபகையும் உதட்டன்பும்நீடுவோம்
ஊரை அடித்தே உலையிலேபோடுவோம் நெஞ்சே

4. உற்றகலைஎல்லாம் கற்றமெய்ஞ்ஞானிபோல்
ஊரைமயக்கிடுவோம்—பழு
தற்றமெய்ஞ்ஞானத்தில் பற்றுதலின்றி
அலையஉடம்படுவோம்
மற்றவரைக் கெடுத்துப்பழிவாங்குவோம்
வாழ்வோரைக்கண்டால் வயிறுப்பிவீங்குவோம்
நற்றவம்செய்யாமல நாளெல்லாம்தூங்குவோம்
நல்வேதநாயகன் பாதத்தைநீங்குவோம் நெஞ்சே

## மனமயக்கந் தவிர்த்தல்

### 144. இராகம் - எதுகுலகாம்போதி, அடதாள சாப்பு.

---

பல்லவி

நீமலைக்காதே—நெஞ்சே—நீமலைக்காதே நீமலை

அநுபல்லவி

நேமத்துடன்ஐயன்—நாமத்தைப்போற்றிடில்
க்ஷேமத்தைக்கொள்ளுவோம்—காமத்திலேசிக்கி நீமலை

சரணங்கள்

1. மோகத்தையும்—அவிவேகத்தையுந்தரும்
போகத்தையும்உக்தி—யோகத்தையும்நம்பி நீமலை

2. ஆட்டையும்மங்கையின்—மாட்டையுங்கட்டிய
வீட்டையுமுன்கெட்ட—கேட்டையுமேயெண்ணி நீமலை

3. கீச்சுக்கீச்சென்றோடும்—மூச்சுபோனால்ஒரு
பேச்சுக்காகாமலப்—பீச்சுக்குழல்நம்பி நீமலை

4. நாட்டைக்கொள்ளையிடும்—வேட்டைக்காரன்நமன்
காட்டைக்கலைத்துயிர்—கூட்டைக்கொள்வான்ஐயோ நீமலை

5. கேட்டைதருஞ்சோற்று—மூட்டைதனைஒன்ப
தோட்டைப்பாண்டத்தைக்கற்—கோட்டையெனநம்பி நீமலை

6. கொண்டையிலேரத்னத்—தண்டையிலேவிழிக்
கெண்டையிலேமதன்—சண்டையிலேசிக்கி நீமலை

7. சேலையென்றும்முத்து—மாலையென்றுந்தினம்
வேலைகொள்ளும்பெண்கள்—காலைத்தழுவியே நீமலை

8. சொத்துதமக்கென்று—கத்துவதன்றி
ஆபத்துக்குதவாத—புத்திரரைநம்பி நீமலை

9. தாயகனைவேத நாயகனைவிட்டு
மாயவலைபட்டுத் தூயநெறிகெட்டு நீமலை

---

## நற்புத்தி கூறல்

145. இராகம் - சுருட்டி, திரிபுடை தாளம்.

பல்லவி

போனதுபோகட்டும் நீஇனியாகிலும்
புத்தியாய் வாழ்மனமே — போனது

அநுபல்லவி

ஞானமில்லாத நடக்கையைத்தொட்டாயே
நம்பினயென்னை நட்டாற்றில்கைவிட்டாயே — போனது

சரணங்கள்

1. எத்தனைநாள் இருந்தாலும்ஒருநாள்
இறப்பதுசத்தியமே—அப்போ
தென்னவரும்புண்ணிய பாவம் அல்லாமல்மற்
றெல்லாம்அநித்தியமே
பித்தஉடம்பை வளர்த்திடச்செய்கிறாய்
பிரேதவயித்தியமே—என்றும்
பேதமில்லாப்பரன் பாதம்பணிந்தோர்க்குப்
பேரின்பம் சாநித்தியமே
பக்தர்சங்கத்தைநீ நித்தம்பிரிந்தாயே
பங்கம்புரிந்தாயே—எங்கும்திரிந்தாயே — போனது

2. தன்தாரம்அன்றிப் பரதாரம்தாய்க்குச்
சமானம்மிதுவேதரே—கெட்ட
தாசியைக்கண்டால் நமஸ்காரஞ்செய்துநீ
தப்பவழிபாரே
இன்றுநாளையென்று நாள்போக்காமல்வினை
இக்ஷணமேதீரே—பின்னும்
எந்தஉயிரையும் சொந்தஉயிரென
எண்ணித்தயைகூரே
என்றும்பணப்பேய் தனைநீரும்பிட்டாயே
எச்சுக்குட்பட்டாயே—சீச்சீகெட்டாயே — போனது

3. நாதனைப்பேசிடும் நாவினால்அற்ப
நரஸ்துதிபாடாதே—நாளும்
நானெனதென்றபி மானம்பிடித்துநீ
நாடெங்கும் ஓடாதே

சாதகபாதகம் என்னவந்தாலும்
தவம்விடக்கூடாதே—கோடி
தர்மம்உனக்குண்டு கர்மம்விளைக்கும்
தனத்தினைத்தேடாதே
போதவேதநாயகன்தாள்விடுத்தாயே
பொன்னை அடுத்தாயே—என்னைக்கெடுத்தாயே போனது

## நித்தியானந்தந் தேடல்

148. இராகம் - இந்துஸ்தான்காப்பி, ஆதி தாளம்.

பல்லவி

நித்தியானந்தத்தைநாடு—பர
நின்மலசுகந்தேடு—மனமே நித்தியா

அநுபல்லவி

சத்தியமார்க்கந் தனிலேகூடு
சற்சனசங்கத்துடன்உறவாடு நித்தியா

சரணங்கள்

1. இந்திரஜாலம் உலகவைபோகம்
இன்றைக்கிருப்பது வோசந்தேகம்
அந்தரமின்னல்போல் அழியுந்தேகம்
ஐயோ அதனுடன் உனக்கென்னஸ்நேகம் நித்தியா

2. தனதானியமுத லானசம்பத்து
சாசுவதமோ அதற் காயிரந்தத்து
தினமுங்கவலை விளைத்திடும்வித்து
சீச்சீ அதனை விரும்பல்விபத்து நித்தியா

3. மெய்யேஒன்றுக்கும் உதவாபண்டம்
மிருகாதிகள்சூழ் மாமிசகண்டம்
பொய்யோஇதற்கிங்கு நித்தியகண்டம்
புண்ணியஞ்செய்யுனக்காயிரந்தண்டம் நித்தியா

4. காண்பதெல்லாம்நிலை யல்லஅநித்தியம்
காயம்இறந்திட வேண்டும்அகத்தியம்
வீண்பொருள்மீதுனக் கென்னபைத்தியம்
வேதநாயகன் சொல்லேசத்தியம் நித்திய

## கள்ள ஞானம்



147. இராகம் - இந்துஸ்தான்காப்பி, ரூபக தாளம்.

பல்லவி

புண்ணியம்போல் பாபம்—மனமே
புரிந்தோம்நாம் தினமே — புண்ணியம்

அநுபல்லவி

திண்ணமாகக்குளிக்கப் போயுந்தன்மேலே
சேற்றைப்பூசிக்கொண்டு திரும்புதல்போலே — புண்ணியம்

சரணங்கள்

1. கையிலேபிடிப் பதுஜெபமாலை
பக்கத்தில்வைப்பது வோகன்னக்கோலை
மெய்யாகத்தினம்படிப் பதுதர்மநூலை
மேலும்மேலும்நமக்கு துன்மார்க்கவேலை — புண்ணியம்

2. ஒருபெண்வேண்டாமென்று கொள்வோம்சந்நியாசம்
ஊரில்உள்ளபெண்கள் மீதெல்லாம்நேசம்
பருகப்பசியில்லாத போதுபவாசம்
பசித்தால்ஒருபானைப் பருக்கையுந்நாசம் — புண்ணியம்

3. கடவுளைத்துதிப்பது போல்வாய்பாடும்
கண்ணுங்கருத்துங்கண்ட இடமெங்கும்ஓடும்
திடமாககோயிற்குள்ளே தேகம்போய்க்கூடும்
சிந்தனைவெளியிலே திரிந்துதிண்டாடும் — புண்ணியம்

4. ஆனதலையில்வளர்ப் பதுஜடைமுடியே
அனுதினமுங்கெடுப்ப தாயிரங்குடியே
தானம்பிறர்அறியக் கொடுப்பதோர்நொடியே
தனியேவந்தவனுக்குத் தான்தடிஅடியே — புண்ணியம்

5. அடித்திடும்கொடுமையிற் புலிக்குநாமேலே
ஆகையினால்ஆசனம் புலித்தோலே
நடித்திடுங்குரங்குநாம் சேஷ்டையினாலே
நமக்குள்ளகுறைவு பின்புறத்தொருவாலே — புண்ணியம்

6. அங்கமெல்லாங்கரு மேகவியாதி
அதனை மறைக்கமெய்யில் அணிவோம்விபூதி
கற்கையில்இல்லாப் பொருள்மனையாதி
நாம்துறந்தோம்நல்ல துறவறநீதி — புண்ணியம்

7. ஏகஅன்னம்தள்ளிப் பிடிப்போம்ஒருசந்தி
இராபக்ஷணங்களால் நிறைப்போம்தொந்தி
தேகபலம்ஒடுங்கில் விரக்தியாய்ப்பிந்தித்
திடமானால்நம்செய்கை சிரிக்குமேசந்தி — புண்ணியம்

8. உள்ளத்தின் அழுக்கை எந்நாளுமேகழுவோம்
உடலைக்கழுவநீரில் அடிக்கடிவிழுவோம்
கள்ளத்தனமாகச்சந் நிதிமுன்னே அழுவோம்
காசுக்குநாயையும் கைகட்டித்தொழுவோம் — புண்ணியம்

9. பசியில்லாதவர்க்குச் செய்வோம் அன்னதானம்
பசித்துவந்தோரைச் செய்வோம் அவமானம்
சுகியாகப்பிறர்க்குப தேசிப்போம்ஞானம்
துர்க்குணக்கடலிலே தினஞ்செய்வோம்ஸ்நானம் — புண்ணியம்

10. பெருமையாய்அணிவது காவிவஸ்திரமே
பிரதிஷ்டைசெய்வது தர்மசத்திரமே
பாவியநமது துர்க் குணம்சமுத்திரமே
பாடோய்வேதநா யகன்சரித்திரமே — புண்ணியம்

---

## பொருளாசை யொழித்தல்

148. இராகம் - கனகவசந்தம்; ஆதி தாளம்

பல்லவி

பொருளை விரும்பவேண்டாம்—மனமே
பொருளை விரும்பவேண்டாம்

அநுபல்லவி

ஒருவரிடமுமில்லா துரொங்குப்பறக்கும்
திருவேதநாயகன் சேவடிதுறக்கும் — பொருளை

சரணங்கள்

1. பணமுள்ளவர்க்குநமன் பயப்படுவானே
குணமுடன் அவர்களைக் கும்பிடுவானே — பொருளை

2. தனவான்களைத்துயர் சார அஞ்சிடுமோ
கனசுகம் அவருடன் கலந்துகொஞ்சிடுமோ — பொருளை

3 பார்க்கவொட்டாமலே பார்வையைக்கெடுக்கும்
வார்த்தைசொல்லாமலே வாயையுந்தடுக்கும் — பொருளை

4. மண்டலத்தில்நமக்கு வயிறொருகுதிரா
கண்டபடிஉண்ணநாம் கபந்தனுக்கெதிரா — பொருளை

5. ஊரில்நம்மிருப்பிடம் ஒருமுழமட்டே
பாரிலேநமக்கேன் பலமனைக்கட்டே — பொருளை

6. உலகில்வயிறுநமக் குள்ளதுசாணே
மலைமலையாய்க்குவித்து வைக்குதல்வீணே — பொருளை

7. சங்கையில்லாமல்பணந் தலைவெட்டும்ஒருவாள்
தங்கைவருவாள்பின்பு தமக்கைவருவாள் — பொருளை

8. வித்தாரமாகப்பொருள் வேண்டுதல்தாழ்வு
செத்தால்தெரியுமே செட்டியார்வாழ்வு — பொருளை

9. அவரருளுடன் ஏழைக்குதவாப்பணம்பிணமே
பொருள்அதைக்குழிவெட்டிப் புதைக்குதல்குணமே — பொருளை

10. பூதமானாலும்உண்ணப் போதுமாகாணி
ஆதலால்நமக்கேன் ஆயிரங்காணி — பொருளை

11. கெண்டைச்சேலைக்காரிதான் கிழவியாகாளோ
கொண்டைப்பூமுடித்திடும் குமரிசாகாளோ — பொருளை

12. வெறுங்கழுத்தாயிருந்தால் விக்குமோதொண்டை
உறுந்தலைஅணிபோனால் உடையுமோமண்டை — பொருளை

13. கடுக்கன்இல்லாவிட்டாற் காதுகேளாதோ
உடுப்புகள்இல்லாவிட்டால் உடம்புளோதோ — பொருளை

14. கந்தல்அணிந்தவள் கர்ப்பம்ஆகாளோ
விந்தைநகையுள்ளவள் மெலிந்துபோகாளோ — பொருளை

15. பொருந்தச்செலவிடாமல் புதைத்திடும்பணமே
இருந்தென்னபோயென்ன இதில்என்னமனமே — பொருளை

16. நிதிவெள்ளியாதிகள் நிச்சயம்மண்ணே
புதையல்தன்னினமென்று புசிப்பள்மண்பெண்ணே — பொருளை

---

## செல்வச்செருக்கு

### 149. இராகம் - தேவமனோகரி, ஏக தாளம்.

பல்லவி

வீண்கர்வம் ஏன்மனமே — உனக்கு
வீண்கர்வம் ஏன் மனமே

அநுபல்லவி

காண்பொருள்சகலமும் கடவுள் ஆதினம்
கனதொண்டமானுந் தோட்டியுமேசமானம் — வீண்

சரணங்கள்

1. நம்முடன்பிறந்ததுண்டோ உத்தியோகம்
நமக்குமுன்னே அது பலர் அனுபோகம்
அம்மஅதற்குக்காத் திருப்பார் அநேகம்
அனைவர்க்கும்உண்டு ராஜீகதெய்வீகம் — வீண்

2. தாசிகள்போல்செல்வம் பலருடன்கூடும்
தனமிருந்தஇடத்தில் தரித்திரம்நாடும்
கூசாமல்யானையைக் கொசுகுமேசாடும்
குப்பைஉயர்ந்து கோபுரத்தையும்மூடும் — வீண்

3. கனவில்கண்டங்கத்திரிக் காய்கறிக்காமோ
கல்லால்இரும்பால் காயங்கொண்டோமோ
தினம்அசையாமல்மண்ணில் வோகொண்டநாயோ
சினந்துநாம்சபித்திடில் திசையெல்லாம்வேமோ — வீண்

4. தம்பொருளென்பர் மனைவியர்மைந்தர்பேரர்
தப்பினால்விடுவரோ தாயாதிக்காரர்
வெம்பிச்சமயம்பார்த் திருப்பார்சோரர்
மிச்சத்தைச்சுருட்டுவார் மேல்அதிகாரர் — வீண்

5. இடையில்கோவணமின்றிப் பிறந்தோமெய்யே
இறந்திடுங்காலத்தும் நாம்வெறுங்கையே
உடைமைநமதுசொந்தம் என்பதுபொய்யே
ஊரார்பொருளைநாம் சுமந்தோம்ஐயே — வீண்

6. ஜெகமுழுதும்நமக்குச் சர்வமானியமா
சிந்தித்தகாரியம் எல்லாம்ஜயமா
சுக்கதுக்கபேதம் இல்லாதிவ்யமயமா
துஷ்டன்இயமனுக்கு நமைக்கண்டால்பயமா — வீண்

7. நீடுந்தங்கையும்தமக் கையும்அதிநேசம்
நிதமுங்கைமாறிக் கொள்வார் அவர்வாசம்
சூடுண்டமாடுபோல் துள்ளல்ஆபாசம்
துள்ளினமாடுபொதி சுமக்கும்பிரகாசம் — வீண்

8 தாய்வயிற்றிலிருந்து ஜனித்திட்டபோது
சட்டைதலைப்பாகுடன் நாம்வந்ததேது
மாயப்பிரபஞ்சத்தின் வாழ்வெல்லாஞ்சூது
மாவேதநாயகனை மறக்கவொண்ணாது — வீண்

---

## உலக வாழ்வை வெறுத்தல்

150. இராகம் - இந்துஸ்தான்காப்பி, ரூபக தாளம்.

பல்லவி

வாழ்வைநம்பாதே —மனமே— வாழ்வைநம்பாதே

அநுபல்லவி

தாழ்வில்லாத நமதுஸ்வாமி
தாளைத்தேடு பாடுபூமி — வாழ்வை

சரணங்கள்

1. தேகமாம்ஸமூட்டை—பல
ஜெந்துவுக்கும்நல்ல வேட்டை—அதில்
ஓகோ அனந்தம் ஓட்டை—உயிர்
ஓடிடவத்தனை பாட்டை—இந்த — வாழ்வை

2. இன்றைக்காளுவார் நாடு—நாளை
எடுப்பார்கையிலே ஓடு—உடல்
ஒன்றுக்குதவாத கூடு—இதை
உற்றுப்பார்த்தால்வெட்கக் கேடு—புவி வாழ்வை

3. பெண்பிள்ளைக்கென்ன வாட்டம்—நம்மைப்
பிடிங்கித்தின்பதிலே நாட்டம்—கையில்
உண்டாகும்போது கொண்டாட்டம்—செல்வம்
ஓய்ந்தால்சகலமும் ஓட்டம்—புவி வாழ்வை

4. இந்தஉலகத்திற் பிறந்தார்—முன்னம்
எத்தனையோபேர்கள் இறந்தார்—பெற்ற
தந்தைதாய்பாட்டரும் பறந்தார்—நாலு
தாரங்கள்போய்நம்மை மறந்தார்—புவி வாழ்வை

5. இன்றுபல்லக்கினிற் போவார்—நாளை
எடுக்கும்ஆள்களும் ஆவார்—நரர்
என்றவர்யாவருஞ் சாவார்—மதி
ஈனர்நரகத்தில் வேவார்—புவி வாழ்வை

6. கூத்தில்அரசனைப் போலே—வேஷம்
கொண்டவர்க்குண்டோசெங் கோலே—புவி
சாத்தியநாடக சாலை—அந்தச்
சாலையில்நாம்எந்த மூலை—புவி வாழ்வை

7. வண்டியும்ஓடத்தில் ஏறும்—ஓடம்
வண்டியில்ஏறும் நாள்தோறும்—நாம்
கொண்டபொருள்கள் கைமாறும்—வேதம்
கூறுஞ்சொல்லே நிறைவேறும்—புவி வாழ்வை

8. எண்ணிக்கையில்லாமல் இங்கே—முன்னம்
இருந்தவரெல்லாம் எங்கே—நாமும்
நண்ணிப்போகவேண்டும் அங்கே—வேத
நாயகன்பாதம்நம் பங்கே—புவி வாழ்வை

---

## உடலை வெறுத்தல்

151. இராகம் - இந்துஸ்தான் காபி, ரூபக தாளம்.

பல்லவி

உடலைநம்பாதே—மனமே உடலை

அநுபல்லவி

குடலுந்தசையும் எலும்பும்நரம்பும்
கொழுத்துப்பழுத்துப் புழுத்துதிரம்பும் உடலை

சரணங்கள்

1. இந்திரியம்மல மூத்திரம்—தசை
இரத்தம்நிறைந்த பாத்திரம்—பாச
பந்தப்பேய்வளர் க்ஷேத்திரம்—வெறும்
பவபந்தநாடக சூத்திரம்—இந்த உடலை

2. ஆசைப்பக்ஷியின் கூடு—பல
அசுத்தஞ்சேர் குப்பை மேடு—இதை
ஏசிப்போபோவென்னும் வீடு—கிட்ட
எட்டிவாவாவென்னுங் காடு—இந்த உடலை

3. கண்ணில்பீளைகள் வடியும்—இரு
காதிற்குறும்பி படியும்—சளி
வண்ணமூக்கில்வந் திடியும்—நல்ல
வாயும்எச்சிலாய் முடியும்—இந்த உடலை

4. பயனின்றிவிழு மட்டை—கொடும்
பாம்புகழற்றுஞ் சட்டை—போலே
உயிர்போனால்வெறுங் கட்டை—இதை
உற்றுப்பார்த்தால்லொட லொட்டை—இந்த உடலை

5. காகம்நாய்நரிக் கூட்டம்—பல
கழுகுக்கும்நல்ல ஊட்டம்—கரு
மேகம்நிழல்போல ஓட்டம்—இது
மெய்யல்லபொம்ம லாட்டம்—இந்த உடலை

6. எத்தனைபேர்புவி யாண்டார்—அவர்
எல்லவருமுன்னே மாண்டார்—இங்கே
செத்தவரில்எவர் மீண்டார்—தெய்வ
சித்தம்ஒருவருந் தாண்டார்—இந்த உடலை

7. மோடியேன்ஒருக் காலே—உடல்
முழுதும்எலும்பு தோலே—அதில்
நாடிஒடுங்கி னுலே—பின்பு
நமக்கிங்கேயென்ன வேலை—இந்த உடலை

8. கணவன்தெய்வமென்பாள் பாரி—அவள்
காரியத்திற்கெட்டிக் காரி—செத்த
பிணமுன்வருவாளோ நேரில்—சுகம்
பிரிந்ததற்கல்லவோ ஒப்பாரி—இந்த உடலை

9. கிருமிகட்குப காரணம்—தசை
கிழிந்துவடியும் இரணம்—சிறு
கருமமேற்கொள்ளுந் திரணம்—இது
காணாந்தப்பினுல் மரணம்—இந்த உடலை

10 வேதநாயகன் கூறும்—சொல்லை
மீறினுல்நல மாறும்—பல
காதந்துர்க்கந்தம் நாறும்—பித்தம்
கபலமலஞ்சலம் ஊறும்—இந்த உடலை

---

## பணதூஷணை

---

152. இராகம் - சங்கராபரணம், ரூபக தாளம்.

பல்லவி

பணமேஉன்னுல்என்ன குணமே—தண்டம்
பண்ணினேன்சற்றும்என் கண்ணின்முன்னில்லாதே பணமே

அநுபல்லவி

மணமில்லாமத மோகங்குரோதந்தான்
மார்க்கமுமூர்க்கமும் யார்க்குமேபோதிக்கும் பணமே

சரணங்கள்

1. தேடிஉனைவைத்து மூடியவர்க்குநீ
தீர்க்காயுசுதருவாயோ—இனி
நாடியமன்வந்து சாடும்போதுநீ
நானென்றுமுன்வருவாயோ
கூடியபேர்கள் குடியைக்கெடுப்பாயே
கொல்லச்சொல்லிபின்னும் காட்டிக்கொடுப்பாயே
ஓடிஓடி அற்பரைப் போயடுப்பாயே
உத்தமரைக்கண்டால் ஓட்டமெடுப்பாயே    பணமே

2. மத்தியில்உன்னைப் படைத்ததல்லால்முன்
வரும்போதுகூட வந்தாயோ—இஷ்ட
சித்தியும்சத்தியும் நித்தியங்கைகூடச்
சிலாசாசனம்நீதந்தாயோ
புத்தியிருக்கும் இடம்விட்டுநீங்குவாய்
பொய்யும்புரட்டும் உள்ள இடத்தோங்குவாய்
எத்திசையுங்கெடுத் துப்பழிதாங்குவாய்
ஈயாதவர்கை யகப்பட்டுத்தூங்குவாய்    பணமே

3. மண்ணில்உனைநரர் பண்ணினதன்றி
மனிதரைநீபண்ணினையோ—உயர்
விண்ணினைமண்ணினைப் பண்ணினோன்நேசம்
விலகச்செய்சத்துருநீயோ
என்னரிதான இடமெங்கும்ஓடுவாய்
இந்திரஜாலந் செய்துவிளையாடுவாய்
வண்ணநரர்கள் மனக்கண்ணைமூடுவாய்
வைத்துப்புதைப்பவர் வாயில்மண்போடுவாய்    மனமே

4. வஞ்சகமாயப்பிர பஞ்சமெல்லாம்நீ
விளைத்துச்செய்வாய்கொடுங்கேண்மை—கெட்ட
நஞ்சம்நீகருணை நெஞ்சம்எண்ணாதமெய்ஞ்
ஞானிகட் கல்லவோமேன்மை
பஞ்சமாபாதகங்கட்குநீ ஆலயம்
பாரில்துன்பமென்ப தெல்லாம்உந்தன்மயம்
மிஞ்சஉனை யுடை யோர்க்கொழியாப்பயம்
வேதநாயகன்மே லுனக்குண்டோஜயம்    பணமே

## பரஸ்திரிகமனம் விலக்கல்

### 153. இராகம் - கமாஸ், ஆதி தாளம்.

பல்லவி

மாதரை நினையாதே—நெஞ்சமே — மாதரை

அநுபல்லவி

பூதலமேல்பெரும்—பாதகமும்விப
ரீதமுமேவரும்—ஆகலினால்மறு — மாதரை

சரணங்கள்

1. அருமஞ்சட்பூச்சல்லவோ முகக்காந்தி
அடிக்கடி பெண்கள்நிற மாறும்பச்சோந்தி
ஒருமையாய்அவர்களை விரும்புதல்பிராந்தி
உடற்குட்புகுந்துபார்த் தால்வரும்வாந்தி — மாதரை

2. முன்னழகும்பின் னழகுமேபட்டு
முகஅழகானது நெற்றியிற்பொட்டு
அன்னநடையென்பது கவிஞர்கள்கட்டு
அழகுநில்லாமற் பறந்திடுஞ்சிட்டு — மாதரை

3. மரித்திடும்மாதர்கள் சுகம்அரைக்ஷணமே
மறுநிமிஷத்தில்உண் டாந்துன்பரணமே
பிரிந்திடில்மலஜலம் எலும்புதோல்நிணமே
பிராணன்போனால்கரியாய் பிடுங்கிடும்பிணமே — மாதரை

4. மேனிமுழுதும்வெளி வேஷத்தின்தளுக்கு
மினுக்கெண்ணைபூசியே காட்டுவாள்சளுக்கு
சனம்அறவேதினந் தினந்தண்ணீர்முழுக்கு
இல்லாவிடிற்கப்பல் ஏற்றலாம்அழுக்கு — மாதரை

5. இடையில்மயக்குவது சாலியன்சேலை
இருகாதில்ஜொலிப்பது தட்டான்கைவேலை
கடையிலேவிற்பது கொண்டைப்பூமாலை
கன்னிக்குச்சொந்தமெல் லாம்வெறுந்தோலே — மாதரை

6. கன்னியர்விழிஉயிர் பிளக்கிடும்அம்பு
கனதனம்கமன்குழல் உனைக்கட்டுந்தும்பு
அன்னியமாதர்கள் விஷமெனநம்பு
அவருடன்பேசுவதேபெரும்வம்பு — மாதரை

7. இதமாகவேமணஞ் செய்தசீமாட்டி
இகபரம்இரண்டிற்கு மேவழிகாட்டி
இதரமன்னர்களைச் சேர்வோன்காமாட்டி
என்றைக்கும்அவனுக்கு மூத்தவன்பேட்டி — மாதரை

8. என்றுங்காமாதுரர்க்கு ரோகங்கள்நிலையே
ஈளறும்போட்டகையில் வேண்டும்வேப்பிலையே
அன்றுகொண்டவன் அறிந்தால்வருங்கொலையே
அற்பசுகத்தில்வரும் ஆபத்துமலையே — மாதரை

9. கழுவிவாசனை ஊட்டா விடில்கெட்டவீச்சு
காதவழிஅடிக்கும் இதுநிசப்பேச்சு
தொழும் அழகென்பதெல்லாம்மேற்பூச்சு
தோகையர்கிழமா னால்கனஏச்சு — மாதரை

10. அழகழகென்பதெல் லாம்வெறும்ஜாலம்
அணியுந்துணியும்போ னால்அலங்கோலம்
விழல்நிகர்சுகத்தினை வெறுப்பதுசீலம்
வேதநாயகன் சொல்அநுகூலம் — மாதரை

---

## இதுவும் அது

154. இராகம் - கௌளிபந்து, ஆதி தாளம்

பல்லவி

மனமேஉனக்குமகாசகிர்தம்—பர
மாதரைநினையாதே — மனமே

அநுபல்லவி

தினமென்சொற்படி கேட்டால்உனைத்துதி
செய்வேன்மறுத்திடில்—வைவேன்—வைவேன் — மனமே

சரணங்கள்

1. சட்டி முகத்தைச் சந்திரபிம்பமென்றும்—வெறும்
சதைக்கட்டிகளைத் தங்கக்கும்பமென்றும்
முட்டிக்கால்களைச் சொர்ணஸ்தம்பமென்றும்—மாதர்
முன்கயிலைக்குஞ் சபாக்கம்பமென்றும்
மொட்டைத்தலைக்கும் முழங்காலுக்கும்பிணைத்தே
முடிந்தாயேவினை—படிந்தாயேகெட்ட மனமே

2. உச்சிட்டத்தை அமிர்தக்கட்டியென்றும்—நாறும்
ஊத்தைவாயைப் பவளப்பெட்டியென்றும்
பச்சப்பீளை வடியுங்கிட்டியொன்றும்தே
வாங்குநலை அபூர்வசிட்டியென்றும்
பிச்சைக்காரன்கந்தையை மெச்சிக்கொள்வதுபோல்
பிடித்தாயேபொய்யைப்—படித்தாயேகெட்ட மனமே

3. செட்டிகளால் அல்லவோ இடையழகு—எண்ணெய்ச்
செக்கர்களால் அல்லவோசடையழகு
தட்டார்களால் அல்லவோநடையழகு—மாதர்
தம்மழகெல்லாம் பலகடையழகு
சுட்டிச்சுவரில்முட்ட வெள்ளெழுத்தோநீ
குதித்தாயேபெண்ணைத்—துதித்தாயேகெட்ட மனமே

4. சொத்தைப்பற்களை முத்துச்சரங்களென்றும்—மிகச்
ஆப்பியிதாளை மூங்கில்மரங்களென்றும்
சித்தமாகக் கமலக்கரங்களென்றும்—நாறும்
சிக்குமயிரைச் சலதரங்களென்றும்
பித்தன்போல்வர்ணித்து வேதநாயகன்அடி
பிரிந்தாயேதுன்பம் புரிந்தாயேகெட்ட மனமே

---

## இதுவும் அது

155. இராகம் - சௌராஷ்டிரம், ஆதி தாளம்.

பல்லவி

பெண்ணாசையே பெரும்பித்து—அதில்
பிரமிப்பதெல்லாம் விபத்து பெண்

அநுபல்லவி

கண்ணாலேவலை பூட்டி அற்பசுகம்
காட்டிப்புருஷரை வாட்டிவதைக்கும் — பெண்

சரணங்கள்

1. கலகலெனஅசைப் பார் அவர்தண்டை
காட்டுமிருக மயிரேகொண்டை
உலகைமயக்கும் அவர்சேலைக்கெண்டை
உற்றுப்பார்த்தால்நன்மை ஏதவர் அண்டை — பெண்

2. கேவலம்அங்கமெல் லாம்பிணநாற்றம்
கிறுகிறெனமயக் கந்தலைக்கேற்றம்
ஓவியமேனி மினுக்குப்பொய்த்தோற்றம்
உள்ளேதிரும்பிப்பார்த் தால்முழுமாற்றம் — பெண்

3. கட்டிநட்டியாகக் கண்பீளைசாரும்
காதிற்குரும்பிசளி எச்சில்சேரும்
கொட்டும்வியர்வைதலைப் பேனும்ஈரும்
குப்பிகாற்றமாக் குளிந்திட்டநீரும் — பெண்

4. மண்ணில்எலும்புதோல் அல்லவோமாது
மற்றதெல்லாஞ்செட்டி தட்டார்செய்சூது
பெண்ணில்லாவிட்டால் பிழைப்பவர்க்கேது
பெண்ஜெபமும்அவர் போனால்செல்லாது — பெண்

5. மண்ணிற்பரஸ்திரீயைச் சேருநிமித்தம்
வாழ்வுஞ்சுகமுந் தனமும்அநர்த்தம்
எண்ணிலாத்துன்பமும் புண்களும்பித்தம்
ஈனமும்புக்கு மகோற்சவம்நித்தம் — பெண்

6. இரவில்கூத்தாடிகள் வேஷம்எடுப்பார்
இருட்டில்எவரும் மயங்கிக்கொடுப்பார்
தரையில்மின்னார்பகல் வேஷம்தொடுப்பார்
ஜாலவித்தைசெய் துலகைக்கெடுப்பார் — பெண்

7. உண்டால்விஷம் வெட்டினாற்கொல்லுங்கத்தி
உன்னினோர்கண்டோரைக் கொல்லும்பெண்சத்தி
அண்டாமல்ஆடவர் ஓடுதல்புத்தி
அமர்வேதநாயகன் சொற்கேட்டால்சித்தி — பெண்

## உய்யும் வழி

156. இராகம் - சங்கராபரணம்; ரூபக தாளம்.

பல்லவி

உய்யும் வகையிது நெஞ்சமே—வேறு
செய்யும்உபாயங்கள் வஞ்சமே உய்யும்

அநுபல்லவி

மையல்தரும் மலங்களை நீக்கு
ஐயன்பொற்பாதத் திக் குன்னை ஆளாக்கு உய்யும்

சரணங்கள்

1. சிந்தைகலங்க மூவாசையே—நாளும்
நிக்கிரகஞ்செய் அப் பசாசையே
எந்தவிதத்தினு மாசையே—ஒழித்
தென்றென்றுஞ்செய் தெய்வபூசையே உய்யும்

2. நான்எனவிதன் றபிமானமே—மிக
நாட்டுவது மதியீனமே
ஏன்உனக்கிந்த அஞ்ஞானமே—நீதான்
என்றுஞ்செய்வாய் ஜெபத்தியானமே உய்யும்

3. பெண்டுசேய்பண்ட பதார்த்தமே—பெரும்
பீடையாம்அந்தச் சங்கார்த்தமே
கொண்ட அறந்தான் யதார்த்தமே—அதைக்
கூடில்உண்டாம் பரமார்த்தமே உய்யும்

4. மையல்மிகுந்து கெடாதே—புவி
வாழ்வென்பது வெறுஞ்சூதே
ஐயும்மெய்யன்பு விடாதே—வேத
நாயகனை நிதம்ஓதே உய்யும்

## நெஞ்சொடு பிணங்கல்

### 157. இராகம் - அசாவேரி, ஆதி தாளம்.

பல்லவி

அநுதினம் இந்தப்படி—உன்னுடன்போர்கொடுக்க
யாராலாகும் நெஞ்சே — அநு

அநுபல்லவி

தனபக்தமொடுகள்ளாய்—காமானுபக்தந்தள்ளாய்
தினமும்என்னுரைகொள்ளாய்—சீச்சீஇதென்னபிள்ளாய் — அநு

சரணங்கள்

1. அனந்தமுறைநான் சொல்லக்கேளாய்
அகந்தை அழியாயோ
தினந்தினமும் நீபுரிந்திடும்துற்
செய்கைகள் ஒழியாயோ—நீ
நினைந்ததே திடமா உன்னால்
நிதமுஞ் சங்கடமா
செய்வதெல்லாம் அடமா — அநு

2. படித்ததனிவே தந்தான்சொல்லிய
படிநீ நடவாயோ
கடித்தவிஷம் ஒப்பாகியவினையின்
கடலைக் கடவாயோ—நீ
பிடித்ததேபிடியா ஆசைப்
பேயுன்னிடங் குடியா
உடுத்தமாயைக்கு நீமிதியடியா
உன்றொழில் இப்படியா — அநு

3. கடந்தமேலோர் பகர்ந்தமொழியைக்
கனவிலு மதியாயோ
நடந்தபொய் யாகியவழிநீங்கி
நல்வழி மிதியாயோ—நாம்
அடைந்தஉடல் சதமா—புவிவாழ்
வானது சாசுவதமா

தொடர்ந்துவேத நாயகன்ஹிதமாய்ச்
சொல்லியுமே மதமா அத

## துர்க்குணம்போன்ற நற்குணங்கள்

158. இராகம் - தன்னியாசி, ஆதி தாளம்.

பல்லவி

செய்யவேண்டுமானல் நீ அநுதினம்
செய்—செய்—செய்—மனமே

அநுபல்லவி

ஐயோவெறுத்தாய் நற்செய்கைகளையே
ஆகையிற்பின்சொலுந் துர்ச்செய்கைகளையே செய்ய

சரணங்கள்

1. எதிர்உதவிகருதி ஈயாலோபம்
ஏனர்கள்காற்றடிக் கினும்அகில்சோபம்
வதிதீவினைமேல் தீராக்கோபம்
வருவதுவாட்டும் இப்படிப்பாபம் செய்ய

2. பரன்அடிமீதில் அடங்காமோகம்
பலதெய்வங்களைப் பணியாத்துரோகம்
இரவும்பகலும்புண் ணியந்தன்னில்இராகம்
இப்படியேதான் பாபம்அநேகம் செய்ய

3. பலருக்கும்உதவிசெய் வதில்பலவந்தம்
பரஸ்திரீக்கிடம் ஈயாதவிர்ப்பந்தம்
தலமிசைபிறர்க்கிடர் செய்வதில்மந்தம்
தளராதிவ்வகை தோஷம்அனந்தம் செய்ய

4. பொய்கொலைகளவுகள் செயஅறியாமை
புனிதர்போல்நாம்இலை யென்னபொறுமை
மெய்விலகியஅவ தூறுதராமை
மேன்மேல்இப்படி யேபலதீமை செய்ய

5. நற்குணந்துர்க்குணம் எனச்சொலும்அசத்தியம்
நற்காரியம்பேணுத அபத்தியம்
நற்கதிபெறுவதில் ஒழியாப்பைத்தியம்
நானிலத்திலிவ்வித மானதுஷ்கிருத்தியம் செய்ய

6. நன்மைதின்மைகள்மேல் காமக்குரோதம்
நாளும்அச்செய்கை யிலேபிடிவாதம்
தன்மயிமித்தம்சர்வ லோகவிரோதம்
தளராதிவ்வா றேஅபராதம் செய்ய

7. ஆட்கொள்வேதநாயகன் பாதமுத்தாரம்
அணியென்உனக்குறைத் தேன்சவிஸ்தாரம்
கேட்கிலேஆதலிற் கொடுத்தேன்உத்தாரம்
கெட்டசெய்கைகள்உன திஷ்டப்பிரகாரம் செய்ய

---

## மனவஞ்சகத்தைப்பற்றிக் கூறுதல்

159. இராகம் - பந்துவராளி, ஆதி தாளம்.

பல்லவி

புரட்டெல்லாம்எங்கே படித்துக்கொண்டனை
புகலுவாய் மனமே—இந்தப் புரட்

அநுபல்லவி

முரட்டுமார்க்கம் சென்றிழைகிறாய்—அனு
முனையின்உள்ளும்நீ நுழைக்கிறாய்—இந்தப் புரட்

சரணங்கள்

1. பொருளைத்தந்தவன் அருளைமறந்து
பொருளுக்கே உபசாரம்—செய்யும்
மருளர்போல்அற்பப் பொருளைவிரும்பி
வான்பரன் உபகாரம்—தன்னை
மறந்தாய்—என்னைத்—துறந்தாய்—பொன்னைச்
சிறந்தாய்—பின்னைப்—பறந்தாய்—பாரில்
உருளில்லாமல் தேரோட்டுகிறாய்—பானு
உதயம்இரவிற் காட்டுகிறாய்—கன
இருள்கொள்பாசத்தில் மாட்டுகிறாய்—நாளும்
என்னைப்பப்பரம் ஆட்டுகிறாய்—இந்தப் புரட்

2. மண்டலந்தனில் கண்டபொருளெல்லாம்
வன்மைபொன்றநீ குறித்தாய்—பிர
சண்டஆசைக் கள்உண்டதாலேநீ
தலைமயங்கியே வெறித்தாய்—தன

நாசி—ஈனப்—பேசி—வினை
பூசி—லையே—சீச்சீ—பார
அண்டங்களைக்கை அடக்குகிறாய்—கால்போல்
ஆழ்கடல்மீதும் நடக்குகிறாய்—பல
எண்டருவின்னுங் கடக்குகிறாய்—புண்யம்
என்றால்எழாமற் கிடக்குறாய்—இந்தப் புரட்

3. என்னசொல்லினும் உன்னல்செய்பாயுனக்
கேனிந்த தலை யாட்டை—மாறும்
முன்னமேஐயோ பின்னஞ்செய்கிலை
மூளுந்தீவினைத் திரட்டை—இது
மோசம்—ஏய்துப்—நாசம்—லவ
லேசம்—விசு—வாசம்—இன்றி
அன்னம்போலெங்கணும் பறக்கிறாய்—கல்லின்
ஆவிடத்தும்பால் கறக்கிறாய்—சுக
நன்னலந்தனைத் துறக்கிறாய்—வேத
நாயகன்சொல்லை மறக்கிறாய்—இந்தப் புரட்

---

## மனமயக்கம்

### 160. இராகம் - வசந்தா, ஆதி தாளம்.

பல்லவி

மயங்கிறாய்மனமே—ஐயோவீணே மயங்

அநுபல்லவி

மயங்கிறாய்மனமே—வாழ்வுசொப்பனமே
மாறாமல்தினமே—ஐயோவீணே மயங்

சரணங்கள்

1. ஏகனைமோக்ஷத்—தியாகனைக்கருணைபிர
வாகனைப்பணியாமல்—ஐயோவீணே மயங்

2. எண்ணியபெரியோர்—கண்ணியபொருளாம்
புண்ணியம்புரியாமல்—ஐயோவீணே மயங்

3. நேயம்உள்ளோர்கள்—தாயகன்வேத
நாயகனைத்தொழாமல்—ஐயோவீணே மயங்

## காலதூஷணை



### 161. இராகம் - தர்பார், ஆதி தாளம்.

பல்லவி

ஓகோகாலமே-உன்போல்எவர்க்-குண்டிந்திரஜாலமே ஓகோ

அநுபல்லவி

போகுமாகவேஅண்டம் பூவெல்லாம்மேய்வாய்
பூனைபோலிருந்துநீ புலியைப்போற்பாய்வாய் ஓகோ

சரணங்கள்

1. ஊரெல்லாந்தூங்கினும் உனக்கில்லைதூக்கம்
ஓயாமல்ஓடுவா யுனக்குண்டோதேக்கம்
ஆர்கெட்டால்உனக்கென்ன அறியாய்நீநோக்கம்
அதிகவட்டிகள்கொடுப் பவருக்குன்மேல்ஊக்கம் ஓகோ

2. பாலரைக்கிழவராய் பண்ணியேகெடுப்பாய்
பகைமதன்ஜெயம்கட வாமலேதடுப்பாய்
காலிரண்டுடையார்க்குக் கோலொன்றுகொடுப்பாய்
காலனுக்குயிரெல்லாங் காட்டியேவிடுப்பாய் ஓகோ

3. ஆயுதமில்லாமல் யாவையும்அறுப்பாய்
அழுதாலுந்தொழுதாலும் அகன்றெம்மைவெறுப்பாய்
சாயுந்திராசுபோலே சகலமும்நிறுப்பாய்
சகலஉயிரையுஞ் சட்டியிலிட்டுவறுப்பாய் ஓகோ

4. கல்லைப்போல்உடம்பையும் வில்லைப்போல்வளைப்பாய்
கணந்தினம்மதிவாரம் ஆண்டெனக்கிளைப்பாய்
வில்லைப்போல்வதனத்தைச் செல்லைப்போல்துளைப்பாய்
வீங்கழகியர்க்குத் தேவாங்குருவிளைப்பாய் ஓகோ

5. துக்கம்உற்றவர்க்குநீ தொலையாமற்கிடப்பாய்
சுகமுள்ளபேர்க்குநீ துரிதமாய்நடப்பாய்
விக்கலும்இருமலும் வேதையுங்கொடுப்பாய்
மிஞ்சுங்கருமயிரைப் பஞ்சுபோற்கெடுப்பாய் ஓகோ

6. மலைகள்மண்டபங்களை வலிமையாய்இடிப்பாய்
வாரிஏழுகடலும் வற்றிடக்குடிப்பாய்
தலைதடுமாறநீ தான்கொள்ளை அடிப்பாய்
தனிவேதநாயகன் தயையாலேகடிப்பாய் ஓகோ

---

# உத்தியோக சம்பந்தக் கீர்த்தனைகள்

## நியாய பரிபாலனஞ்செய்ய வரம் வேண்டல்

162. இராகம் - சாவேரி, ஆதி தாளம்.

பல்லவி

நானேபொதுநீதி—தானேசெலுத்திட
நல்வரம்அருள்கோனே நானே

அநுபல்லவி

தானேயாகிய சாக்ஷாத்காரமே
தேனே அமுதமே திவ்வியஞானசாரமே நானே

சரணங்கள்

1. வட்டவுலகில்யாரும் பொதுவில் அனுபவிக்கும்
மழைகால்வெயில்பூதாதி போலவே
இஷ்டர் அநிஷ்டர் தமர் எளியர்செல்வர்பெண்பூமான்
என்னும்பேதம்உன்னுமல் ஏலவே
திட்டமாச்சரிநீதிசெலுத்தலின் மனம்நாட்டிச்
சிறியவழக்கும்பெரு வழக்கெனத்திண்ணம்நீட்டிச்
சட்டசாஸ்திரங்கள்மிக உணர்ந்தறிவினைத்தீட்டிச்
சகலஉயிர்களுமென் தன்னுயிர் தன்னுயிர்போல்பாராட்டிச்
சிட்டபரிபாலனனெனுமுடிசூட்டித்
தீயர்மொழிபுகாமற் செவிவழிபூட்டிக்
கொட்டஞ்செய்துட்டர் கண்ணில்விரலைவிட்டாட்டிக்
கூகூயெனப்பொய் கதறும்படிமாட்டி நானே

2. அருணன் சந்திரனிலை நீங்கினுந்தரைமேல்கீழ்
ஆயினும்அறத்தைநான் விட்டாமல்
வருணபோற்பொருள்மாரி வழக்கர்பெய்யினும்அதை
வாங்கயாசகன்போற்கை நீட்டாமல்
வரும்வழக்கர்மனத்தை வன்சொற்களால்சுடாமல்

மற்றைகீழ்உத்தியோகஸ்தர் வம்புக்கிடங்கொடாமல்
அருமடியால்வழக்கா ராய்ச்சியில்பின்னிடாமல்
அப்பன்பாட்டன்சொன்னாலும் அறநெறிதனைவிடாமல்
தருமதேவதைஞாய ஸ்தலந்தனில்கடிக்கத்
தப்புச்சாக்ஷிகள்கிடு கிடெனவேதுடிக்க
இருமையகல அநீதியேஓட்டம்பிடிக்க
இலஞ்சம்வாங்கிகள்வெட்கத் தால்உயிர்மடிக்க நானே

3. அந்தவிலங்குமுடங் கூன்குருடூமைமுத
லானஜன்மம்வராமல் தடுத்தாயே
முந்தமானிடஜன்மந் தந்ததுமன்றிப்பின்னும்
முன்சீப்பதிகாரமுங் கொடுத்தாயே
இந்தஉபகாரத்தை இதயத்தெழுதித்தேக்கி
எவர்க்கும்பெரியவனு னெனும்அகங்காரம்நீக்கி
நந்தாவிளக்கம்போல நவையிருளினைப்போக்கி
நான்செய்தநீதிநூற்கென் நடையைத்திட்டாந்தமாக்கித்
தொந்தமெனவேவினை யாடிஉண்டுதூங்கிச்
சுகஉடலம்வளர்க்குஞ் சோம்பினைநீங்கி
விந்தைநன்முயற்சியில் மேன்மேலோங்கி
வேதநாயகன்நல்லோன் எனஇசைதாங்கி நானே

---

## துர்வழக்காளிகளைப்பற்றி

163. இராகம் - சௌராஷ்டிரம், அடதாள சாப்பு.

பல்லவி

இந்தவழக்குக்கெல்லாம் நாம்தானா—கோர்ட்டில்
வந்தவன்எல்லாம்நமக் கெஜமானா இந்த

அநுபல்லவி

நந்தன்வலியச்சண்டை பிடித்தானும்—அந்த
நாகனைத்தட்டி அவன் அடித்தானும் இந்த

சரணங்கள்

1. தந்தைதன்மார்க்கஞ்செய்து கெட்டானும் - பிள்ளை
தாரங்களைத்தெருவில் விட்டானும்
முந்தஅதிகக்கடன் பட்டானும்—நிலம்
முழுதுந்தர்விநியோகம் இட்டானும் இந்த

2. அண்ணன் தம்பிமார்களை வெறுத்தானும் அவர்க்
காஸ்திபாகங்கொடாமல் மறுத்தானும்
கண்ணன் வயலைப்பொன்னன் மறுத்தானும் கடைக்
காரன்செட்டிசரக்கை நிறுத்தானும் இந்த

3. ககனப்பூவந்திமகன் கொய்தானும்—அதைக்
கண்டுகுருடன் அம்பாலெய்தானும்
ஜெகமிசைஊமையனும் வைதானும் அதைச்
செவிடன்கேட்டுநகை செய்தானும் இந்த

4. தூங்கன்வாதியைக்கண்டு சிரித்தானும்—சிங்கன்
தும்மிஇருநெட்டி முரித்தானும்
தங்கன்இரண்டுகையும் விரித்தானும்—அந்தச்
சாந்தனுந்தன்முகத்தைச் சுரித்தானும் இந்த

5. காமிலான்வாதியைப் பிடித்தானும்—இரு
காலிலான்உதைத்துதைத் திடித்தானும்
சிரமில்லாதவன்கடித் தடித்தானும்—பதம்
செப்பும்வேதநாயகன் படித்தானும் இந்த

---

## உத்தியோக சங்கடம்

164. இராகம் - நாதநாமக்கிரியை, ஆதி தாளம்.

பல்லவி

அப்பா இதென்ன அதிகாரம்—ஐயோ
எப்போதும்பக்திசெய்ய இல்லையேநேரம் அப்பா

அநுபல்லவி

சுப்பையரோ அபத்தமூட்டை—அந்த
சுந்தரய்யர்வழக்கிலே தொளாயிரம்ஓட்டை
அப்பையர்கற்பிப்பார் பொய்சீட்டை—அந்த
அனந்தய்யர்கட்டுவார் ஆகாசக்கோட்டை அப்பா

சரணங்கள்

1. சிலர்கேட்பார் கற்பகச்சோலை—வேறு
சிலர்கேட்பார்நமன் அணு காமலேஓலை
பலர்கேட்பார் நூறுபுலிப்பாலை—அல்லும்
பகலும்உலகில்நமக் கிதுதானோவேலை அப்பா

